உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.



# திருப்புத்தூர்ப் புராணம்.

இரண்டாம் பதிப்பு.

இது.

ஸ்ரீ வன்றொண்டரவர்கள் மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி.

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஷையூர் மெ. பெரி. ராம. மெ.

ஞானசம்பந்தச் செட்டியாரவர்களால்

குமரன் அச்சியந்திரசாலையில் அச்சிடப்பெற்றது.

ருதிரோத்காரி௵ கார்த்திகைமீ.



திருப்புத்தூர்ப்புராணம்.

முதலில் சிலபாகம் ஞானம்பிகாப் பிரசிலும்
மத்தியில் சிலபாகம் ஞானசம்பந்த விலாசப் பிரசிலும்.
முடிவில் குமரன் பிரசிலும் அச்சிடப்பெற்றது.



# முகவுரை.

ஸ்ரீமந் மணிவாசகப் பெருமான் "பாண்டிநாடே பழம் பதி" என்பது முதலிய பற்பல திவ்விய வாக்கியங்களால் விதந் தெடுத் தோதப்பெற்ற பாண்டிநாட்டிலே பரமசிவாபேதர்களா கிய சுத்தாத்துவித சித்தாந்தசைவ சமயாசாரியர்கள் திருவாய் மலர்ந்தருளிய திராவிட சுருதிகளாகிய தேவார திருவாசகாதி திருவருட் பாடல்பெற்ற திருத்தலங்களின் ஒன்றாய்த் திரு ஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் தேவா ரப்பதிக மிரண்டு பெற்று விளங்குவது திருப்புத்தூரென்னும் சிவஸ்தலம்.

இத் தலமகிமை, பதினெண் புராணங்களுட் சிறந்த காந்த மகா புராணத்தின் ஆறு சங்கிதைகளிற் சிறந்த சங்கர சங்கி தையிலே ஸ்ரீ தலமான்மியம் நவபுரி மான்மியமென விளங்குவ தாம். இம்மகிமை வடமொழியி லிருத்தலால் இது தமிழுல கர்க் குபயோகமாகும்படி பெரியாராஞ்ஞை சிரமேற்கொண்டு திருவருள் விளக்கியவாறு தென்மொழியாகிய தமிழ்மொழி பெயர்த்துத் திருப்புத்தூர்ப் புராணம் என்று பெயர்தந்து இற் றைக்கு முப்பது வருடங்களுக்கு முன் அச்சிட்டு வெளியிடப் பெற்று நாளடைவிலே செலவாகி விட்டபடியால் மேலும் பல அறிஞர் விருப்பம் நோக்கிச் சிற்சில குறிப்புரைகளும் விளக்கி மெ. பெரி. ராம. மெ. ஞானசம்பந்தச் செட்டியாரவர்கள் பொ ருள்கொண்டு அச்சிடப்பெற்றது.

இதில், சிற்சில இடங்களில் எதுகை முதலியன நோக்கி நகரத்துக்கு னகரம் சேர்த்துள்ளது.

ராம. சோ.



உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

ஸ்ரீ வீணகாந புரஸ்த நல்லூராக்கிய நகரநிவாஸ

சுத்தாத்துவித சித்தாந்தசைவ வியவஸ்தாபக

ஸ்ரீமந் நாவலர் பெருமான் பாததூளி சிரமேற்கொண்ட

## ஸ்ரீ அம்பலவாண நாவல சுவாமிகள் இயற்றியது.

---

திருவளரு மலர்ச்சும்மைச் செழும்பொழில்கள் சூழ்ந்திலங்கு
மருவளர்செந் தமிழ்ப்பாண்டி மண்டலத்துப் பன்னுன்கா
முருவளர்வாண் மதிச்சடையார்க் குகந்ததல மவற்றொன்று
புருவளர்விற் றிருவளர்மா புரிதிருப்புத் தூராமால். (௧)

அன்னதல மதுகெளரி யரியலர்மின் காரிசுரர்
மன்னவன்சே யிவர்முதலோர் தொழுதுவரம் வாய்ந்ததெனி
லின்னதென விதன்பெருமை யியம்புநர்யா ரிவ்வுலகின்
முன்னுபல மொழியுள்ளு முதன்மொழியாம் வடமொழியில். (௨)

சூதமுனி யொருவாறு சொற்றதனைத் தூய்மைமிகு
மாதவத்தோர் வழுத்துமருள் வளஞ்சால்செந் தமிழ்மொழியி
லோதுகென வானன்பர் பலர்வேண்ட வுவந்துரைத்தான்
போதமலி நூல்கள்பல புரைதபக்கற் றுணர்புனிதன். (௩)

அருளடக்கம் பொறைவாய்மை யன்புநடு நிலையின்சொற்
பொருண்மிகுமெய்க் கொடையாதி பொருந்துகுணக் குன்றனையான்
றிருவருளே யுருக்கொளுநஞ் சீமானு வலர்பெருமான்
குருபதத்தன் பானுரிமை யெனக்கிசைந்த கொள்கையினன். (௪)

சைவசிகா மணியெங்கள் சாதுசிகா மணிபாசத்
தெவ்வைமுனிந் திடுதீர சிகாமணிநா வலர்செம்மல்
செவ்விதருட் டொடர்புநிகழ் சிறப்பதனா லெஞ்ஞான்று
மெய்வழியுந் திறம்பாம லென்பாலு மன்புடையான். (௫)

வேதவா கமங்களெலாம் விளம்புபொருள் சிவமென்றே
போதமலி தாவரசங் கமமிவற்றிற் பொருந்துநெறி
யாதரவின் வழிபடுவோ னக்கமணி வெண்ணீறு
மோதுதிரு வெழுத்தைந்து முறுதனமாக் கொண்டுயர்ந்தோன். (௬)

பாடுபுகழ் நால்வருரை முதன்முறைகள் பன்னிரண்டுந்
தேடுமியன் மெய்கண்ட சித்தாந்தம் பதினான்கும்
வீடுறுமெய்ச் சிவாநுபவம் விளைநிலமா வதுவேட்டு
நாடுமருட் டாளாண்மை வழுவாத நன்மையினான். (௭)

அரியயற்கு மரிதாய வசிதாரா விரதமென்ப
பரர்மனையை நயவாமை யங்கதையீப் பார்மீதே
திரமுறுதன் செயலதனாற் றெருட்டுமுயர் சீலனெனத்
தரியலரும் வியந்துரைக்கத் தகுநிதரி சனமானோன். (௮)

என்போல்வார்க் குற்றதுணை யியல்காரைக் குடியதனி
லின்பால்செய் வணிகர்குலத் திராமநா தக்குரிசி
றன்பான்மெய்த் தவத்துதித்தோன் சைவநெறி தகவளர்க்கு
மன்பானன் னெறிநின்ற சொக்கலிங்க மாநிதியே. (௯)



# சூசீபத்திரம்





E 593

# பிழைத்திருத்தம்.

—o—

## தேவாரம்.

| பக்கம், | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧ | ௧ | ௨ | ெளாடு | ேளாடு |
| ௨ | ௮ | ௩ | வல்லி | வல்ல |

## புராணம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ௩ | ௮ | ௨ | வந்தருளு | வுவந்தருளு |
| ,, | ,, | ,, | கண்ட | கண்டங் |
| ௪ | ௧௮ | ௨ | சொல | சொல் |
| ௬ | ௨௬ | ௨ | நீத்த | கோதுநீத்த |
| ௧௨ | ௩௧ | ௨ | வம்பணி | வெம்பணி |
| ௧௩ | ௩௨ | ௪ | காற்றினி | காற்றனி |
| ,, | ௩௬ | ௧ | கோணு | கொணு |
| ,, | ௩௭ | ௧ | மெய்தரு | பெய்தரு |
| ௧௪ | ௪௫ | ௩ | ரிடைபுண | ரிடைட்புண |
| ௧௮ | ௭௩ | ௩ | யார்போ | யாற்போ |
| ௨௦ | ௮௮ | ௪ | றிறள் | றிரள் |
| ௨௧ | ௯௭ | ௧ | படரக்குப் | படரக் |
| ,, | ௧௦௧ | ௧ | தொன்றோர் | தொன்றோ |
| ,, | ௧௦௨ | ௪ | புறப்ப | புரப்ப |
| ௨௨ | ௧௦௫ | ௩ | உணந்தி | உணர்ந்தி |
| ௨ஜீ | ௧௦௮ | ௧ | நிலத்தில | நித்தில |
| ௨௩ | ௧௧௩ | ௪ | பெணார் | பெணாற் |
| ௨௪ | ௬ | ௧ | மேதலாய் | மேவதாய் |
| ,, | ௯ | ௧ | மருசங் | மிருசங் |
| ௨௫ | ௧௫ | ௧ | கவிகைச் | கவிகைக் |
| ௨௬ | | ௨௯ | சல்பன் | கல்பன் |
| ௨௭ | ௨௬ | ௩ | வெய்யார் | மெய்யார் |
| ௨௯ | ௪௫ | ௩ | ெருழிசெய் | ெருழில்செய் |
| ௩௨ | ௭௧ | ௪ | கவாவர் | கவர்வர் |
| ௩௩ | ௭௪ | ௨ | யுயர்த்திய | யுயர்த்தியு |
| ,, | ௭௭ | ௪ | ருமிவர் | ரும்மிவர் |
| ௩௫ | ௯௫ | ௪ | வோடும் | வொடும் |
| ௩௬ | ௯௯ | ௩ | பசுபடு | பசுப்படு |
| ,, | ௧௦௦ | ௪ | வினபுரி | வினப்புரி |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|
| ,, | க0ரு | ச | கமந்து | கமர்ந்து |
| ஙஅ | ககச | ங | முட்பொ | முப்பொ |
| ,, | ககரு | உ | யரியமுத | யரிமுத |
| ,, | கககூ | ங | றியைநத | றியைந்த |
| ,, | கஉஉ | ச | ரன்பார்காசி | ரன்பரற்காசி |
| ச0 | கஙக | ச | லுலகி | னுலகி |
| ,, | கஙச | க | களினிடை | களிடை |
| ,, | கஙஎ | ச | வேவு | மேவு |
| சஉ | கசஅ | ச | செரல்வள | செல்வுவள |
| சங | க | ச | மேதியின் | மேதினியின் |
| சச | க0 | ச | துண்ணை | திண்ணை |
| ருஉ | கூ | உ | ரேனு | ரேனும் |
| ருங | கக | ,, | பாட்டு | இரட்டித்துவிட்டது |
| ருசு | கக | ச | டகயை | டகைய |
| ,, | கச | உ | காத்தி | கரத்தி |
| ருஅ | உரு | க | சிளர் | கிளர் |
| ,, | ங0 | உ | சநது | சந்து |
| சு0 | சரு | க | முதல் | முதல |
| சுக | சஎ | க | முன்றும் | மூன்றும் |
| சுங | சுசு | க | திகழ | திகழ் |
| சுச | எக | ச | மராக | மராக் |
| ,, | எரு | ச | பஙச | பங்க |
| சுஎ | ரு | ங | மன்றி | மன்றின |
| எக | ச0 | உ | பால | பால் |
| எஉ | சச | ங | கரச | கரசு |
| ,, | சசு | க | நகவே | நகவேத |

புட்நோட் *ஆதம்—விருப்பம்

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | சகூ | க | கனியி | கணியி |
| எங | ருக | உ | பிறராற | பிறராற் |
| ,, | ருங | ங | யானறோர் | யான்றோர் |
| ,, | ருரு | ச | கிதழ | கிதழ் |
| ,, | ,, | ,, | ணரந்து | ணர்ந்து |
| கூச | சுஉ | உ | கைகெங்கை | கைக்கொங்கை |
| ,, | சுங | ச | தொழலிரு | தொழவிரு |
| கூஎ | கூ0 | ச | பெருாவ | பொருவ |
| அக | கஉஉ | உ | திப்பய | திப்பிய |
| அஉ | கஙக | ங | துகிலொடுக் | துகிலொடு |
| அச | கசக | ச | கண்ட | கண்டை |
| அசு | கருசு | சு | ழஞ்சுனழ் | ழஞ்சனம் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௯0 | ௧௯௩ | ௧ | மாதவரா | மாதவனு |
| ௯௩ | ௨௧௫ | ௨ | ள்வேயருரான் | யருள்வோன் |
| ௯௫ | ௨௨௯ | ௨ | தகமை | தகைமை |
| ௯௮ | புட்நோ | ட் | தத்தம் | தந்தம் |
| ௧0௨ | ௫௨ | ௩ | வுந்தம் | வுந்தச் |
| ௧0௫ | ௭௪ | ௩ | பருகு | பிருகு |
| ,, | ௮௧ | ௪ | பிதிவுற | பதியுற |
| ௧0௯ | ௧௧௨ | ௧ | யதிகேட் | யதுகேட் |
| ௧௧௮ | ௨௮ | ௪ | தன்ட | தண்ட |
| ௧௨0 | ௪௨ | ௩ | கழுவு | கழிவு |
| ௧௨௨ | ௫௪ | ௪ | புரிந்தியி | புரிந்திய |
| ௧௨௪ | ௬௬ | ௪ | சிவணிருத் | சிவநிறுத் |
| ௧௨௪ | ௬௭ | ௧ | ருமவி | மருவி |
| ,, | ,, | ௪ | திருவு | திருவ |
| ,, | ௭௧ | ௩ | சமா | சமாச |
| ௧௨௫ | ௭௩ | ௩ | பசு | பேசு |
| ,, | ௭௭ | ௩ | தம்பா | தம்பவ |
| ௧௨௬ | ௭௯ | ௩ | திடுச | திடுகு |
| ,, | ௮0 | ௩ | வித்தகு | வித்தகு |
| ௧௨௭ | ௯௨ | ௪ | தரிவனவாய் | தறிவனவாய்ச் |
| ௧௨௮ | ௯௪ | ௩ | யெனசிவா | யெனச்சிவா |
| ௧௨௯ | ௯0௨ | ௧ | ஞாளி | ஞாளி |
| ௧௩0 | ௧0௬ | ௪ | யலக | யலக்க |
| ௧௩௧ | ௧௧௪ | ௪ | கொள் | கொல் |
| ௧௩௨ | ௧௨௫ | ௩ | மிக்குய | மிக்குப |
| ,, | ௧௨௬ | ௩ | சிரமிகை | சிரமிசை |
| ௧௩௬ | ௧௪௭ | ௨ | வில்சார் | வில்வார் |
| ௧௪0 | ௧௬ | ௩ | விலங்க | விலிங்க |
| ,, | ௧௭ | ௧ | நெறி | ணெறி |
| ௧௪௨ | ௩௪ | ௪ | ணிமிரிய | ணிமிரிம |
| ௧௪௬ | ௫௭ | ௧ | மலாடி | மலாடி |
| ,, | ,, | ௩ | நேர்கின் | நேர்நின் |
| ,, | ௬0 | ௧ | அயனைபெரும | அனையபெரும் |
| ,, | ௬௪ | ௧ | புரிந்து | புரிந்த |
| ௧௪௭ | ௬௮ | ௨ | பதிபுகழு | பதிபுகலு |
| ௧௭௩ | ௧௫௨ | ௪ | மார்ட்பி | மார்ப்பி |

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரத்திருப்பதிகம்.

---

## பண்—தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலைத்
திங்களோடுதிளைக்குந்திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலு
மெங்களுச்சியுறையுமிறையாரே. (க)

வேனல்விம்முவெறியார்பொழிற்சோலைத்
தேனும்வண்டுந்திளைக்குந்திருப்புத்தூ
ரூனமின்றியுறைவாரவர்போலு
மேனமுள்ளெயிறாம்பூணவாரே. (உ)

பாங்குநல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள்கொன்றைதிளைக்குந்திருப்புத்தூ
ரோங்குகோயிலுறைவாரவர்போலுந்
தாங்குதிங்கடவழ்புன்சடையாரே. (ங)

நாறுவிண்டநறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டுதிளைக்குந்திருப்புத்தூ
ரூறல்வாழ்க்கையுடையாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (ச)

இசைவிளங்குமெழில்சூழ்ந்தியல்பாகத்
திசைவிளங்குபொழில்சூழ்திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப்படித்தாரவர்போலும்
வசைவிளங்கும்வடிசேர்நுதலாரே. (ரு)

வெண்ணிறத்தவிரையோடலருந்தித்
தெண்ணிறத்தபுனல்பாய்திருப்புத்தூ
ரொண்ணிறத்தவொளியாரவர்போலும்
வெண்ணிறத்தவிடைசேர்கொடியாரே. (சா)

நெய்தலாம்பல்கெழுநீர்மலர்ந்தெங்குஞ்
செய்கண்மல்குசிவனார்திருப்புத்தூர்த்
தையல்பாகமகிழ்ந்தாரவர்போலு
மையுணஞ்சமருவுமிடற்றாரே. (எ)

கருக்கமெல்லாங்கமழும்பொழிற்சோலைத்
திருக்கொள்செம்மைவிழவார்திருப்புத்தூ
ரிருக்கவல்லிவிறைவரவர்போலு
மரக்கனொல்கவிரலாலடர்த்தாரே. (அ)

மருவியெங்கும்வளருமடமஞ்ஞை
தெருவுதோறுந்திளைக்குந்திருப்புத்தூர்ப்
பெருகிவாழும்பெருமானவன்போலும்
பிரமன்மாலுமறியாப்பெரியோனே. (௯)

கூறைபோர்க்குந்தொழிலாரமண்கூற
றேறல்வேண்டாதெளிமின்றிருப்புத்தூ
ராறுநான்குமமர்ந்தாரவர்போலு
மேறுகொண்டகொடியெம்மிறையாரே. (௰)

நல்லகேள்விஞானசம்பந்தன்
செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்று
மல்லறீருமவலமடையாவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# திருநாவுக்கரசுநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# தேவாரத்திருப்பதிகம்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

புரிந்தமரர்தொழுதேத்தும்புகழ்தக்கான்காண்போர்விடையின்பாகன்காண்புவனமேழும், விரிந்தபலவுயிராகிவிளங்கினான்காண் விரைக்கொன்றைக்கண்ணியன்காண்வேதாந்தன்காண், தெரிந்துமுதற்படைத்தோனைச்சிரங்கொண்டோன்காணூர்த்தன்காண்டிருமாலோர்பங்கத்தான்காண், டிருந்துவயல்புடைதழுவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே (௧)

காராருமுலைமங்கைபாகத்தான்காண்மாமறைகளாயவன்காண்மண்ணும் விண்ணுங், கூரார்வெங்கனலவனுங்காற்றுநீருங் குலவரையுமாயவன்காண்கொடுநஞ்சுண்ட, காராருங்கண்டன்காணெண்டோளன்காண்கயிலைமலைப்பொருப்பன்காண்விருப்போடென்றுந், தேராருநெடுவீதித்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௨)

மின்காட்டுங்கொடிமருங்குலுமையாட்கென்றும்விருப்பவன்காண் பொருப்புவலிச்சிலைக்கையோன்கா,ணன்பாட்டுப்புலவனாய்ச்சங்கமேறிநற்கனகக்கிழிதருமிக்கருளினோன்காண், பொன்காட்டக்கடிக்கொன்றைமருங்கேநின்றபுனக்காந்தள்கைகாட்டக்கண்டுவண்டு,தென்காட்டுஞ்செழும்புறவிற்றிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௩)

ஏடேறுமலர்க்கமலத்தயனுமாலுமிந்திரனும்பணிந்தேத்தவிருக்கின்றான்காண், தோடேறுமலர்க்கடுக்கைவன்னிமத்தந் துன்னியசெஞ்சடையான்காண்டுகளர்சங்க, மாடேறிமுத்தீனுங்கானல்வேலிமறைக்காட்டுமாமணிகாண்வளங்கொண்மேதி, சேடேறிமடிபடியுந்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௪)

கருமருவுவல்வினைநோயகற்றினான்காண்காமருபூங்கச்சியேகம்பத்தான்காண், பெருமருவுபேருலகிற்பிணிகடீர்க்கும்பெரும்பற்றத் தண்புலியூர்மன்றுளான்காண், றருமருவுகொடைத்தடக்கையளகைக்கோன்றன்சங்காத்தியாரூரிற்றனியானைகாண், டிருமருவுபொழில்புடைசூழ்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௫)

காம்பாடுதோளுமையாள்காணநட்டங்கலந்தாடல்புரிந்தவன்காண்கையில்வெய்ய, பாம்பாடப்படுதலையிற்பலிகொள்வான்காண்பவளத்தின்பருவரைபோற்படிமத்தான்காண், டாம்பாடுசினவிடையேபகடாக்கொண்டசங்கரன்காண்பொங்கரவக்கச்சையோன்காண், சேம்பாடுவயல்புடைசூழ்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௬)

வெறிவிரவுமலர்க்கொன்றைவிளங்குதிங்கள்வன்னியொடுவிரிசடைமேன்மிலைச்சினான்காண், பொறிவிரவுகதநாகமக்கினோடுபூண்டவன்காண்பொருபுலித்தோலாடையான்கா, ணறிவரியநுண்பொருள்களாயினான்காணாயிரம்பேருடையவன்காணந்தண்கானற், செறிபொழில்சூழ்மணிமாடத்திருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௭)

புக்கடைந்தவேதியற்காக்காலற்காய்ந்தபுண்ணியன்காண்வெண்ணகைவெள்வளையாளஞ்ச, மிக்கெதிர்ந்தகரியுருவையுரித்தகோன்காண்வெண்மதியைக்கலைசேர்த்ததன்மையோன்கா, ணக்கரும்புபெரும்புன்னைநெருங்குசோலையாருக்கதிபதிகாணந்தண்டென்ற, றிக்கணைந்துவருமருங்கிற்றிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௮)

பற்றவன்காணேனோர்க்கும் வானோருக்கும் பராபரன்காண்டக்கன்றன்வேள்விசெற்ற, கொற்றவன்காண்கொடுஞ்சினத்தைநயந்தசெற்றஞானத்தைமேன்மிகுத்தல்கோளாக்கொண்ட, பெற்றியன்காண்பிறங்கருவிக்கழுக்குன்றத்தெம்பிஞ்ஞகன்காண்பேரெழிலார்காமவேளைச், செற்றவன்காண்சீர்மருவுதிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௯)

உரமதித்தசலந்தரன்றனாகங்கீண்டவோராழிபடைத்தவன்காணுலகுசூழும், வரமதித்தவிராவணனைப்பற்கொண்டோன்காண்வானவர்கோன்புயநெரித்தவல்லாளன்கா, ணரமதித்துச்செம்பொன்னினாரம்பூணாவணிந்தவன்காணலைகடல்சூழிலங்கைவேந்தன், சிரநெரித்தசேவடிகாண்டிருப்புத்தூரிற்றிருத்தளியான்காணவனென்சிந்தையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருப்புத்தூர்புராணம்.

## விநாயகர்.

காப்பு.

திருத்த லம்புக ழாரியந் தென்மொழிப்
பொருத்த லம்புனை சொற்பொருள் பொற்புறக்
கருத்த லம்புணர் காட்சியர் காமுறு
மொருத்த லம்புயச் சேவடி யுன்னுவாம். (௧)

## வேறு.

திருவாக்குக் கிறைவனெனுந் தேவகுரு முதலெவருஞ் செயலா ரம்பத்
தொருவாக்கும் பிடுதலையெப் பொருட்கியற்றிக் கருமசித்தி யுறுகின் றாரப்
பொருவாக்குந் தலில்பொருளாங் கைவலிய பத*நிபனைப் புரையி லூனத்
தருவாக்குங் கருணைமழை யும்பன்முக நம்பனையெம் முளத்திற் சேர்ப்பாம்.

## நூற்பயன்.

திருவாழுந் திருப்புத்தூர்ச் சிவசரிதம் படனவிதி சிறப்பச் செய்து
ளுருசார்வத் துடன்கேட்போ ருரைப்போர் நன்மகவுபொருளுலப்பில் போகந்
தருவாழ்வு பெற்றநெடு நாளமர்ந்து நரேந்திரராய்த் தகுபொன் னாட்டின்
மருவாநின் றின்பமுறீஇ மறைமுதல்வ னறைகழற்கீழ் மன்னி வாழ்வார். ()

## வாழ்த்து.

வேதநெறி மகம்வளர்க விண்மாரி முறைபொழிக விரிநீர் வையத்
தோதுவள மறம்பொருளின் போங்குகவை திகசைவ முயர்க வென்று
மீதுறுக கண்மணியும் வெண்ணீறு மைம்மெழுத்தும் விமல ஞான
பூதபரம் பரைபொலிக புரவலன்செங் கோல்வாழ்க புவன மெல்லாம். (௪)

* நிபம்-காரணம்

## கடவுள்வாழ்த்து

### சீதளிநாதர்

திருமாத வன்புவனி பெருந்தவப் பிருந்தகன திருந்தாள் சென்றே
திருமாத§ வன்புவளர் சிந்தையராய்த் தினம்போற்றுஞ் சீத ளீசன்
றிருமாத வன்புவன மிசையிழிபொதிவேணிச் செம்மல் பாற்க
திருமாத†வன்புவனந் தருபரமன் றிருவடிகள் சென்னி சேர்ப்பாம். (க)

பிறந்தைபல புக்கொழிந்தும் பிரமமெனத் தலைமான்ற பிரமன் மாற்குச்
சிறந்தவய னச்சுதனுந் திருப்பெயரீந் தவர்க்குயர்வு நிகழ வேதத்
தறைந்தருளு நிறைந்ததனியருட்கடல்பொற்றிருத்தலத்தினளவாச்செல்வத்
திறந்தலைழயுஞ் சீதளியிற் சீதளிநா யகன்மலர்த்தாள் சிந்தை சேர்ப்பாம். (உ)

### சிவகாமியம்மை.

காத்தானைத் தோட்டெழின்ம கரத்தானை யறம்வளர்த்த கமல நாண்செங்
காத்தானை யருணிறைசா கரத்தானைத் திருத்தலமென் கவினுர் மாந
கரத்தானை ஞானபஞ்சாக் கரத்தானை யிலங்குசிவ காமி யைச்சே
கரத்தானை மதிமறைச்சி கரத்தானை மலர்த்தானைக் கருதிவாழ்வாம். (ந)

### நடேசர்.

பை தூக்கி வருமரவப் பணிதூக்கிச் சடையின்றிசைப் பயங்கொளுவு
மைதூக்கிக் கரத்திளமான் மறிதூக்கி மதிதூக்கி மரியந் தூக்கிப்
பொய்தூக்கித் தளருமிடைச் சிவகாமி காணவெமைப் போல்வார் தம்மைக்
கைதூக்கி யாளுகைக்கோர் காறூக்கி நடித்தவரைக் கருத்துள் வைப்பாம். ()

### சிவகாமியம்மை. (வேறு.)

தத்துவநேர் கண்டுசுத்தி கண்டு தன்னைத் தான்கண்டு தற்சத்தி தனையுங் கண்டாங், கொத்தசிவங் கண்டுகலந் துரிய போகத் துற்றிடுபே ரின்பந்னை யுணர்வி லேழுங், கைத்தலநெல் லியிற்கண்டு கலப்பவெம்மான் சௌரிநடங் கண்டுமனங் களிப்பா ளாகிச், சித்தமகிழ்ந் தெமையளிக்கு மன்னை யெங்கள் சிவகாம சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம். (ரு)

### தட்சிணாமூர்த்தி. (வேறு.)

தடவிருக்கம்* மறைமுடிவு தாமுழுதுா் சேட்டினர்துந் தம்முன்னையப்
படவிருக்க நால்வருக் நஞ் சித்தாந்தத் தனிப்பொருளைப் பகர்ந்து தேறக்
கடவிருக்க வின்பொருளொன் றருட்குறிச்சின் முத்திரைக்கை காட்டிஞான
வடவிருக்கத்தமர்ந்தருளுமறைப்பொருளினைப்பதுமமலர்த்தாள்போற்றி.

---

§ திருமாத-திரும்பாத † பால்கதிர்-உமாதலன் * தட இருக்கு

## வன்னியடிவிநாயகர்.

எவரெனினு நினைப்பவர்விக் கினந்தீர்த்தல் லார்க்கதனை யியற்றும் வாய்மை
திவண்பெயர்தன் றனக்கேயாய்ச் சிறப்பவொளிர் மறைப்பொருளைத் தெய்வ
வானம், புலிசெழுமன் னவபுரியிற் புண்ணியனை வன்னியடிப் புனிதவாழ்
வைக், கவுளமத களிற்றினையெங் கற்பகத்தை யற்பகத்திற் கண்டுவாழ்வாம்.

## சுப்பிரமணியர்.

அருதமாற்†றெறுகணற்க ணையதரித்தெம் பவமிரித்தற் கனுகி தொட்டே
திருகுமரங் கையையகற்றிச சிவந்தமைப்ப வந்தருளுஞ் சேய்தன் கண்ட
கருகுமரன் குமரனென னிருபபத மாத்திரத்திற் காண மேவு
மொருதமரனிருசரணமுளத்திலுநஞ்சிரத்திலும்வைத்துவந்துவாழ்வாம்

## வீரபத்திரர்.

அருமறைமுற்றுணர்ந்தாலு மருளினடங்கார்கெடுவாதுமெய்யென்ற [டும்
றெருளமுற்றுங் கோரமதேகிருவுருவாப்போந்து மகந்தெறன்மேற்கொண்
டொருமுறைமற்றடங்கினர்க்காங்கருளறெளிவுறவயற்குவலவனருந்,
திருவளித்தமறக்கருணையறக்கருணைப்பெருங்கடறாள்சென்னிசேர்ப்பாம்.

### வைரவர். (வேறு.)

துயரா‡ வந்தனை யருள்கெனத் துதித்தவர் சுகமார்ந்
துயர வந்தனை வகற்றியவ் வூறுசெய் தவர்பாற்
பயர வந்§தனைப் புரிந்தவன் சயந்தனைப் படரு
மயர வந்தனைக் காண்டலு மாற்றினேற் பணிவாம். (௧௦)

### திருநந்திதேவர். (வேறு.)

ஆயுமரன் கயிலைமுதல் வாயிலமர்ந் தகம்புறமு மவனே தானே, யாயுமடை
வார்தமைத்தன் னடியுறவைத் தட்புகுத்து மரிய காவற், றாயபணி தலைக்
கொண்டோன் மெய்ப்போத முணர்த்தகுருத் துவமுங் கொண்டு, சேயவரை
யுமண்ணியராச் சேர்த்தருளு நந்தீசன் றிருத்தாள் போற்றி. (௧௧)

## விட்டுணு.

பாயும்விடை யாவொருபாற் பைங்கொடியாய்ப்பாணமாய்ப் பான்மேற் கொள்
ளுந், தூயவரம் பெற்றானைத் துலங்குமவன் றிருநடமே தொழுமுன் னோ
னை, மாயவனை மாயவனை மாயவனை யாண்முலையுண் மாண்பி னனை, யாய
வரன் சீதளியி னமர்ந்தருளெம் பெருமானை யடியிற் றாழ்வாம். (௧௨)

---

† அருதம் மரன் ‡ துயர—துயருறுதலால். § ரவம். ஒலி.

### இலக்குமி. (வேறு.)

வேரி சத்தி னருளின் விரியுஞ்செவ்*
வாரி சத்தின் மருவு மடந்தைமு
ராரி சத்தித னல்லரு ளேக்கநம்
பாரி சத்தின் வளரப் பரசுவாம். (கங.)

### சரசுவதி. (வேறு)

ஆலிய கமண்ட லத்தோன் றூலுவி னமர்ந்திட் டன்பர்
சாலிய கமல மேணித் தற்பர னருள்பெற் றுய்வான்
கோலிய கமமெய்ந் நூல்கள் குறித்துண ரறிவு கூட்டும்
வாலிய கமலத் தன்னை மலரடி மனத்துள் வைப்பாம். (கச)

### தமிழாசிரியர். (வேறு.)

அகத்தியல வருந்தழிழ்மா மறைமுதனூ லாய்ந்துதமி ழுவனி மாக்க
ளகத்தியங்குமிறப்பொழிந்தின்படைவுறச்சந்தினந்தெ றலளாவு்வெற்பி
னகத்தியனூ லகத்தியந்தந் தமர்ந்தருளுந் தமிழ்க்குரவ னகிலம்போற்று
மகத்தியனை யகத்தியனை வகலவறி வகலநினைந் தடியிற் றாழ்வாம். (கரு)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

நாதனுமை நாப்பணின்று நாருருவிற் காழிவந்து நயந்த ஞான்று
மாதியவன் றொருள் பிதாராச் சிதந்தனக்கா தலையுணர்ந்து மமைநியாய்ப்பச்
சீதரனுக் கானுருவ சித்திதந்த புத்தமுறைதக் தீயே னுள்ள
வீதுமொளிர் மணிவிளக்கை வித்தகனை நித்தலுமுள் விரும்பி வாழ்வாம். ()

## திருநாவுக்கரசுநாயனார்.

பார்த்தளவேமனஞ்சோர்ந்துபனைநத்துநளன்வருணன்முதற்பற்பலோரைக்
கூர்த்ததுணைகொடுகுரம்புதயிற்றியலைகடந்திடுமக்குரிசிலுண
வார்த்தெறிநீரமிழ்சிலைதன்னருள்வாக்கினுணையினலம்பியாக
நீத்தமுந்நீர்நீத்தெமையும்பவக்கடனீத்திட்டவர்தாணினைந்துவாழ்வாம்.(கஎ)

## சுந்தரமூர்த்திநாயனார்.

ஆக்குதலுங் காக்குதலு மாமிரண்டும் வல்லானென் றமர்ந்துந் தன்சேய்
நோக்கெரியி னீறுயுட் கையறு நால் வெள்கவொரு கொடியிற் றான்சொல
வாக்கினொரு சேயினுயிர் வௌவுகரா வாவியினீர் வருவி தீங்கோன்
காக்குமவன்பணிவுறவெண்கரியுகைத்தோன்விரைமலர்த்தாள்கருதிவாழ்வாம்

---

*வேரியானது சத்தாயுள்ள தனது இன் அருளை போல விரியும் செவ்வாரிசமென்க.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

ஆசரர்சை வந்திலேநீத் தொருமூவ ரிடைப்பலியா தகன்ற மாறன்
மாசிலுளங் குலேவுறப்புத் தொருங்கொழித்தாங் காசடிமை மருவக் கொண்
டேசுபெறு முபநிடத சிந்துநுகர்ந் தரியதமிழ்த் தெய்வ வேத [டோன்
வாசகமாம் வரதமணி மழைபொழிசம் வர்த்தமுகின் மலர்த்தாள் போற்றி.

## சண்டேசுரநாயனார்.

தாதையுனக் கொருநாமே மைந்தனென் றுண் டெந்தையரு டகையி னேன்
றென், வேதமெலா மாங்காங் குவிதந் துரைப்பவுயர்ந்தபொருள் விதமூன் றாய,
பாதகமேசோறு தரப்பற்றினேன் றனைப்பணிவோர்பைம்போதாதி,யாதுமொ
ருபொருடனக்கென் றீட்டாமே பூசைகொள்வோ னிணைத்தாள்போற்றி. ()

அறுபத்துமூவராதியோர். (வேறு.)

திருக்கைலை தனிலரனு தரிச நோக்கிச் சிவைமகிழ வழைத்திடவந் துலகி
னேனைத், தருச்குறுமா சைவநெறி நிறுவத் தானேனர் சலம்புணர்த்திந் நிலம்
புகுத்தச் சார்ந்த நம்பி, யருக்கணியோன் றாதாதி பணிசெய் வாக்கி யவண்
முதல்கொண் டியற்றுதொண்டத் தொகையின் மேவி, யிருக்குமவ ரியல்பு
ணர்ந்தற் கியாமா ரன்னே ரிணையடித்தா மரைகணித மேத்தி வாழ்வாம்.(உக)

நம்பியாண்டார்நம்பிகள். (வேறு)

பொல்லாத விபமுகத்துச் சண்டீச பாகமுநோர் பொற்பி னூட்டும்
வல்லாள னுதிசைவ மரபின்மணி யடியர்தொகை வகைசெய் வாழ்வு
வில்லாருந் திருமுறைபன் னென்றாகக் கோத்தருளும் விமலன் வானிற்
செல்லாரும் பொழினாரைத் திருநகரி னம்பிகழல்சென்னிசேர்ப்பாம்.(உஉ)

சேக்கிழார்நாயனார்.. (வேறு.)

திருவருள்வா ரித்தருவான் குன்றையுறீஇ மரபிற் சேக்கிழார் கண்மணியா ய
னபாயன் விருக்கீ, டரவிடைதந் திளம்பருவத் தமாத்தியமேற் றமனூற் சா
ர்பகற்றி யுலகுமுதல் கொடுமெய்ந்நூ லுரைத்தவ், வருண்முறைமன் றந்த
ணர்பூ சிப்பவரங்கேற் றியாசிரட்டக் கவரிமுவா யிரர்வேத மோதி, வரமதமா
வூர்ந்துதிரு வருண்மருவு §கிருபா வாகீச பானுவையுட் கொண்டிருண்மாற்
றிடுவாம். (உங)

மெய்கண்டசிவாசாரியர். (வேறு.)

அருமறையின் சிரத்தெளிவாஞ் சித்தாந் தப்பே ராழிக்கடைந் தருட்போதவ
முத மீந்த, மருமுதலைக் கறைமிடறு நெற்றிநோக்கு மறைத்தருளி வெண்
ணெய்நகர் வந்த வாழ்வைப், பரசுறுமே ழெழுபெரியர் பாங்கு சூழ்ந்து பணி
வுறத்தன் மயமளித்த பால ரூப, குருமணியை வர்மணிமெய் கண்ட நாம
குலமணியை மலரடியைக் குறித்து வாழ்வாம். (உச)

---

§ திருவாவாகீசர்-அருண்மொழித்தேவர்.

## அருணந்திசிவாசாரியர்.

புலவேடர் புகுந்தாசு புரியு நெஞ்சப் புலத்துயரைம்†பொறிவாண்மெய்ப் புலக்கை யேந்தி, விலகாமற் றவொழிய வீட்டிக் காம விலங்காதி தடிந்தருளாம் வேலி கோலி, வலமாரு மன்புவித்திச் சிவமார் போக மல்குபர முத்திநலம் வாய்ப்ப வாய்மை, நலமாருஞ் சிவஞான சித்தி தந்த நாதனருணந்திபத நயந்து வாழ்வாம். (உ௫)

## மறைஞானசம்பந்தசிவாசாரியர்.

குலமறையோர் சிரமணியைப் பரத்து வாச கோத்தி ரஞ்செய் தவப்பயனைக் கூறும் வேதத், தலைபழுத்த கனிபிழிந்து நீத்த சாரசைவ சித்தாந்தத் தனிப்பபே ரின்ப, நிலையமுதந் தனையடைந்தார்க் கருரி மொருக்கு நிரீக்கணத்தா லளித்தருளு நிமல வாழ்வை, நலநிறையு மறைஞான சம்பந் தப்பேர் நாயகனைச் சேயடியை நயந்து வாழ்வாம். (உ௬)

## உமாபதிசிவாசாரியர்.

எளியேன்யான் குடியாருக் கெழுது சீட்டென் றேகவெரு வசனத்தாற் றூழ்த்தி யேற்றி, விளியாத பரமுத்தி கொடுக்க வென்னும் வியங்கோளின் வேண்டுகோள் விளங்க வேத, மளியாமின் றேவடிட வயன்மா றேட வரியபிரான் றனிக்கவிசெய் தன்பு கூரு, மொளியாரு முமாபதிமெய்ச்சிவன்றாள்போற்று முழுவலன்பர் கழல்களன்பி னுவந்து வாழ்வாம். (உ௭)

### பட்டினத்தடிகள் (வேறு)

அருந்துற வாண் வெண்காட் டடிகளங் கமல னன்றேட்
டருந்தனி யிலிங்க மேற்ற சற்குரு தாவின் ஞானப்
பெருந்தகை மருத வாணர்ப் பிள்ளையாய்ப் பெற்ற வாழ்வு
திருந்துபூம் பட்டி னத்தெந் செம்மறாள் சிந்தை சேர்ப்பாம். (உ௮)

### அரதத்தாசாரியர். (வேறு.)

திரிபுரத்தார் சிவநியம நீத்த தோடஞ் சிந்து றமால் வந்துநித்தா மெனமுற்றொன்றிப், பரதவித முணர்த்தவரு பொது நூறுறும் பதிசிவனென் றுஞ்சவியாற் பகர்தல் காட்டித், திருவுபைவ வைணவர்க்கு நேமிராமத் திறந்தெரித்தாங் கரதத்த ரெனும்பேர் தாங்கி, யெரியிருப்புப் படியேறி யவர்கோள் வீட்டி யிலகுசைவ நாட்டியரு ளிறைதாள் போற்றி. (உ௯)

### தேவசிகாமணிதேசிகர். (வேறு)

அவனியின்மும் மலர்க்கருள வவுருக்கொண் டருளையில்வந் தமர்ந்தமேனோர், புவியுருவென் றுள்கியிடர்ப் புகாவகைதன் சீர்ப்பெயரே புனைந்துதற்சேர், பலர்பெயர்முன் விகாரமுறப் பண்ணியவர் விகாரமெலாம் படுக்கும் வாய்மைச், சிவகுரவ சிகாமணியாய்த் திகழ்தேவ சிகாமணிதாள் சென்னிசேர்ப்பாம். (௩0)

கடவுள்வாழ்த்து முற்றிற்று
ஆ திருவிருத்தம்-௩௪.



† பொறி-எழுத்து.

# பாயிரம்.



## அவையடக்கம்.



மாதொரு பாகத் தெந்தை வந்திசெய் நந்திக் கோத
மேதகு சனற்கு மார முனிக்கவன் விளம்ப வன்னோ
னோதுற வியாதற் கன்னோன் சூதனுக் கோது மூவா
றேதமில் புராணந் தம்முட் காந்தமிக் கிலங்கு மாதோ. (௧)

அத்தகு புராணத் தீச சங்கிதை யதனு ளோங்கு
மெய்த்தகு திருத்த லத்தின் மேன்மையவ் வடநூ றன்னை
யித்தமிழ் நாட்டி னுள்ளார் யாவரு மெளிதி னோர்ந்து
புந்திமுத் திகள்பெற் றுய்வான் றென்மொழிப் புணர்த்து கென்று. (௨)

இறைவன்மெய் யன்பர் கூற விவர்சொலு மினைய மாற்ற
மறிவிலா வெனக்கீ தாற்ற லரிதெனு மெண்ண மாற்றிப்
பிறவிநோய் மருந்தீ தென்றே பேணுமா றுளத்தை யுந்தி
நிறைமகிழ் தரலா லன்ன நிலைமையே கடைப் பிடித்து. (௩)

அனையமாண் வடநூ றன்னி லறைதல விசேட மாதி
தனைநிகர் வழுதியாதி சந்திரன் கதையீ றாய
வினைதெறு கதையொன் பானுஞ் சருக்கமா விருத்த யாப்பி
னணிமிகு பெரியர் நோக்கி நகைமலர் முகத்த ராக. (௪)

இன்றமிழ்ப் புணர்த்தா னின்றே னித்தல மேன்மை தன்னைத்
தென்றமிழ் முனிவன் றானுஞ் செப்புத லரிதென் றோது
மென்றிழி னறிவி லாத வேழையே னியம்ப வெண்ணி
நின்றதென் னறிவி லாமை வெளியிடு நெறியே யாமால். (௫)

ஆயினும் புல்லு நீரு மருந்துமா னவற்றை மிக்க
தூயதீம் பால தாகச் சுரந்தளிப் பதுபோ லென்றன்
வாயசொற் பொருள்கண் முற்று மனக்கொடு வழுநீத் தான்றோர்
மேயசீ தளிநா தர்க்காங் கினியவா விளைப்ப மாதோ. (௬)

வேறு.

மறையுமளப் பரியபிரா னமர்ந்து வாழு மாண்புகொடெம் பெருமக்கண்மது
ரவாக்கி, னிறையுநவ புரிமேன்மை யாது மோரா நீசனேன் சொலத்தொட
ங்க னிலையி லாச்சிற், றுறவி பொன்று பற்றிடினுங் குலையு நாங்கூ ழுயர்சே
டன் முடிப்புவிழுற் றொருதா னென்று, பொறைபுரிந்து நிலைபெறுவான்
றுணிந்து சென்னி பொற்புறமேற் றாக்கியெழல் போலு மன்றே. (௭)

குன்றெதிர்கூப் பிடுமாபோ லோங்கு விந்தக் குன்றடக்கு தமிழ்மலயக் குன்றக் கோமா, னன்றுரைத்தா லின்றுரைத்த சூதன் வாக்கை யடியேனின்றுரைத்தனனீ தமலன் காதை, யென்றிதரு குணநாடிக் குற்ற நாடி மிகை நாடி மிக்ககொளு மேன்மை யோர்க, ணன்றிதெனக் கொள்வரன் றிநவையே யாய்வார் நயக்கவிகளி யற்கவிக்கு நவில்வா ரன்றே. (அ)

இணைதவிரு மியற்றமிழ்நூற் புலவர் கற்பார்க் கெடுத்துக்காட் டிலக்கியங்களியைபு தோன்றக், குணமருபா வினமன்றே குற்றம் யாவுங் குறித்துணருமிலக்கியமுங் கொளுந்தற் கிந்நூன்,மணமுடைய தாகலிற் சொல்வாக்கி யார்த்தம் வாக்கியைபு தொடையிசைகண் மற்று மெல்லா, மெணவரிய குற்றமுடைத் தென்று தள்ளா தேன்றுகொள்வ ரெனுந்துணிவா லியற்றி னேனல். (கூ)

மாற்றமொன்று சொலச்சொலித்தம் மகவம் மாற்றம் வயங்காமை யுரைப்பமகிழ் பிதாக்கண் மானத், தேற்றமிலெற் குணர்த்தியவன் றொண்டநாதன் றிருவால வாயமர்மெய் யப்பனெம்மா, றூற்றுபணி கொண்டடியென் முடியிற்சூட்டு மாறுமுக நாவலர்கோ னவன்றாட் கன்பே, போற்றுவழி வந்தவிமற் சரமெய்ச் சீலர் புந்திமகிழ் வுறுவரென் சொற் புன்மை நோக்கி. (க0)

வேறு

காண்டகு புத்தூர் வடசொன்மான் மியத்தைச் கவின்கொள்செந் தமிழ்மொழி பெயர்த்துச், சேண்டவழ் மதிசேர் வேணியன் றேவசிகா மணிசிற்சபைப் புரியுந், தாண்டவ ராய சீதளிநாதன் சந்நிதி தனிலரங் கேற்றித், தீண்டரும் பெருமை பூண்டனன் காரைத் திகழ்சொக்க லிங்கதேசிகனே.

பாயிரம் அவையடக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௫.



# திருநாட்டுச்சிறப்பு.

பொது.

திருத்தகு புராத்திற் சிவபுரா மனுவிற் செப்புமைந் தர்க்க நூலினுருந்தகு நிகமா கமமிய வுள்ளி னுமாபதி மதங்களிற் சைவமருத்தியீ சனுக்காந் துதிகளி னருட்பா வாம்பணி களிற்சரி யாதிதிருத்தியம் போலச் சிறந்தது பாண்டிக் கோரா சிங்கனன் ளுடு. (௧)

எம்மைநீ யொப்பாய் கௌரியை யுலோபா முத்திரை யிழையு§மென் றீசன்
பொய்ம்மையின் மாற்ற முகமனென் றனையோர் புகன்றிடா தாண்டுசெய்
செயலான், மெய்ம்மையே நாட்டு முனியைமேற் கொண்டக் கைலையே வி
ழையுமா மலய, நன்மலை யதனைத் தன்னிடைக் கொண்டெந் நாட்டினுஞ்
சிறந்ததிந் நாடு. (௨)

இறையிலக் கணஞ்சொ லியைபினு லுவம னெய்தினு நால்வர்வாக் கியஞ்செய்
நிறைபலற் புதத்தா லினிமையென் பொருளே நிலவுறீஇ யோகரு டிப்பே
ரறைதலாற் கொங்கு மதியுல கன்பி னைந்திணை நிலையடி யார்முன்
பறையருள் வாக்கி தலின்வட சொலினு மாண்டமிழ் வளர்வதிந் நாடு. (௩)

எரிமணி மகுட பங்கமுற் றேகி யெழிலியை யருள்கென விரந்தாங்
கரிபெறீஇ யாஞ்ஞை வழிமழை பொழியு மாடல்சா லரசினர் முனிவு
பரிவகலாத புரேசர்தாம் பாண்டிப் பதிகமுன் னும்பல பாவுள்
வரிசையின் விதந்து புகழ்ந்துசொல் வழுதி மரபினர் புரப்பதிந் நாடு. (௪)

குருக்களெவ் வெவர்க ளவர்க்கெலா மூல குரவனா யமர்ந்த ருளால
விருக்கநன் னிழலோன் சீடனாய்ப் பணிவு மேன்மையும் புகன்றருட் பாக்க
டிருக்கரஞ் சிவப்ப வெழுதிய மொழிந்த சின்மணி வாசகப் பெருமான்
பெருக்கருணீதி யமைச்சிய னடாத்தப் பெற்றதிக் கொற்றநன் னாடு. (௫)

அரனமர் தலங்கள் பற்பல வுளவெத் தேயமு மாயினு மிதன்பின்
விரிவுற வமைத்த புதியன வவைகள் வின்மைசா றொன்மைய திதுவென்
பரிசுணர் சான்றோய்ப் பாண்டிநன் னாடே பழம்பதி யாகவென் றமையாள்
வரதநன் மணிவாக் கடிகண்முன் பரசு மகிமைமிக் குடையதிந் நாடு. (௬)

கயிலையிற் பரம குரவன்வாய் மலர்ந்த கட்டளை மறந்தமை கருதாப்
பயிலுறப் புகன்ற சாபமேற் கொடுபா டாணத்தின் படிவுறு மியக்க
வயில்விழி மடவா ரறுவரும் யாண்டு மகற்றருந் தீங்கெளி தகன்று
நயனுறு மட்ட சித்தியெம் பெருமா னல்கிடப் பெற்றதிந் நாடு. (௭)

கூடலா லானை பூவணஞ் சுழிய றிருத்தலங் கானைகுற் றால
மேடக மாப்ப னூரிரா மேசம் பராசலம் பிரான்மலை சாலி
வாடியே வாத புரிபுன வாயின் மங்கையே பெருந்துறை பாவஞ்
சாடுமூர் முதலாத் திருவருட் பாக்கொ டலம்பல நிறைந்ததிந் நாடு. (௮)

குலத்தினிற் பொறையிற் றிருப்பணிச் செயலிற் குணத்தினின் மானத்திற்
கல்வி, வலத்தின்மெய் வாக்கி லெவற்றினுஞ் சிறந்த வணிகர்கள் சென்னி
நா டிகந்து, நிலத்தினி லுயர்ந்த தானரு ணிறைந்த நீதிசேர் கௌரியர்புரக்
கு, நலத்தினி லுயர்ந்த தெனக்குடி கொண்டு நயந்துவாழ் வுறுவதிந் நாடு. ()

---

§ என்ற வென்னும்-பெயரெச்சத்தகரந் தொக்குநின்றது.

இளைப்பகற் றகரங் கணேசமா நகர மிரணிய புரம்வை ரவப்போ
வளப்பதி நேம மதுகமா புரம்வே லவன்புரி குரைபொன் மாற்றூ
ரளப்பிலிவ் வொன்பான் சிவாலயங் களுமவ் வணிகரா கமவழிப் பூசை
கிளப்பரு நிதிகொண் டங்கமூன் றுருற்றக் கிளர்வுறப் பெற்றதிந் நாடு. (க0)

வேறு.

மன்றிறைவன் றிருவருள்சா ரந்தணரு ளொருவர் மற்றவனைப் பெட்டகத்
துள் வைத்த†வுமா பதியார், குன்றைமுனி பதவணக்க மேயமல மோக்கங்
கொடுப்பதெனை வழுத்துபுச ரிதஞ்சொலருண் மொழித்தே, வன்றருஞ் நார்
மன்னுசிந்தை நற்றுறைப்பன் மாந்த ரவர்போற்றும் பார்மனுதொன் மைப்
புகழ்பூண் டதுசீர்த், தென்றமிழ்நா டென்பதுமுற் றப்பலிடை விதவாச்
செப்பிநிக ழொப்பனைசெய் திப்பியநா டதால். (கக)

வேறு

இன்ன போல்வன பற்பல வற்புதத் தியற்கை
யென்ன நாட்டிறு மில்லன வுள்ளன வீசன்
றன்ன லீலைகண் மலைமலை யாகவே சார்ந்து
மன்னு கின்றன விதற்கிணை யாங்கண மவகுப்பாம். (கஉ)

தலைமை பெற்றுள நால்வகைச் சாதிக ளுத்த
நிலையி னீங்கலா நியமங்கள் ளொழுக்கொடு நிலாவி
யலகில் பன்னிதி களுநிறை யகரங்க ளவையும்
வலனை யாவுருப் படித்தவ ணுலவிறும் வயங்கும். (கங)

எங்கு மாலய மெங்கணு மகோற்சவத் தீட்ட
மெங்கு மாமறை யெங்கணுஞ் சிராவிட வேத
மெங்கு மாமக மெங்கணு மெய்கண்ட நூல்க
ளெங்கும் வேள்விக ளெங்கணு மவர்செலு மிரதம். (கச)

எங்கு மாநதி யெங்கணு மெந்தைவா ழசல
மெங்கும் வாவிக ளெங்கணுஞ் சூழ்மலர்ச் சோலை
யெங்கு மன்றல்க ளெங்கணு மியமியம் பியற்சீ
ரெங்கு மாதவ ரெங்கணு மடாலயச் செறிவு. (கரு)

எங்கு மோதன சாலைக ளெங்குநீர்ப் பந்த
ரெங்கு நீதியன் றெங்கணு நூல்பயில் கழக
மெங்கு நீர்வய லெங்கணு நிறைபசும் பயிர்க
ளெங்கு நீள்விளை வெங்குநெற் போர்களின் பிறங்கல்.(கசு)

---

† பெட்டு அகத்துள்வைத்தளன்பதுமொன்று.
§ நார்மன்னு சிந்தைப்பல நற்றுறைமாந்தர் போற்றும், பார்மன்னு
தொன்மைப்புகழ் பூண்டது பாண்டிநாடு என்பது பெரிய புராணம்.

வேறு.

தண்டலை கற்ப தாருத் தண்டலை கவிழப் போயுந்
தண்டலை யுரும லண்டத் தண்டலைச் சார்ந்து நிற்குங்
கொண்டலைத் தீப தாருக் கொண்டலை யெல்லை யாக்கும்
வண்டலை மலர்சேர் யாறு வண்டலை யொதுக்கி யேகும். (கஎ)

ஓதனக் குவையி னோங்கு முவளக மடால யங்கள்
கேதனக் காடு சூழு மாடங்கள் கெழுவு மின்பங்
கோதனத் தங்கண் மேவும் புறவினன் னெறியிற் கூறுஞ்
சாதனத் திரியையும் யோகர் முயல்செயல் சாலை யங்கள். (கஅ)

மாதவர் கார்கோ ணப்பண் மாதவப் போழ்ந்த சீய
மாதவழ் கடாத்த முக்கண் மாதவ னோப மான †
மாதவ னாழி தான்கொண் மாதவப் பாசம் வாம
மாதவற் பூசிப் பார்கண் மா§தவத் துடச மெல்லாம். (க௯)

சாற்றிடிற் பொருளி லாரைத் தனதனிற் குறைந்தா ரின்றா
லேற்றசு பன்னி மாரை யிகந்திருப் பவரு மின்றாற்
போற்றுமித் தன்மை யாலை புரவலர் முனிவர் பாண்மை
தேற்றிவே ளாண்மை யாரு யாற்றுவர் திகழு மாந்தர். (உ௰)

மழைவளம். (வேறு.)

வேத வாகமத் துணிபொருள் பசுபதி விமலன்
‡காத னாயகி யாசுசெய் கணங்கொளிந் நாட்டி
னோது மேதகு பொதுச்சிறப் பெதைத்தெரிந் துரைத்தாஞ்
சீத மாமுகின் மழைவளஞ் சிற்சில மொழிவாம். (உக)

பாலின் வேலைமுன் மதித்திட மதித்திடப் படர்வெண்
மாலின் மாலினம் வாரிபோய் வாரிமிக் கருந்தி
யாலின் மெய்கறுத் தகன்றவம் மாலென வகன்று
சூலி யாலவன் றொன்னிற மின்னிவிண் சூழ்ந்த. (உஉ)

எம்மி னிங்கணன் மாடமாய் முற்பக லெழுந்து
தம்மு ளொன்றினின் றேங்குமித் தண்ணடை சார்ந்தும்
வம்மெ னாவிளித் திடலின்வாய் விட்டுவெல் விரைய
வெம்மை யாங்கணுந் தீர்த்தருள் வெம்மையின் சாலம். (உங)

† தவனோபமான ஆழியென்றியையும் தவனன்-சூரியன்.
§ தவம்-காடு. ‡ காதல்-மகன்.

ஈசர் தம்முடி யெம்மின நான்குமுன் னிகப்ப
மேசில் கூடமா யியைந்தன வெண்பளிம் மலைமே
லாசி லம்முடி வதிருவா ளேற்பமென் றடுத்து
மூசு தன்மையி னேற்றுவெற் படைந்த சீமூதம். (உச)

மூல மாகிய பகுதியின் முக்குணத் தொகையின்
மேல வானின்முன் வெண்மைபின் கருமைமின் னிலைமை
சால வேற்றுவா னேற்றுவான் றடத்தினிற் படிந்த
நீல வாணடைப்பூ மகண்முலைக் கொண்டுறு நிலைபோல். (உரு)

தனது வெம்பழி பாற்றுசுந் தாப்பெறுந் தகையா
னினிய நாட்டினைத் தெறப்படர் மறப்பசு வினைக்காய்
புனித நந்திவெற் பென்றறி போற்றியாட் டுதல்போற்
றனித வாணமக் கிரியினிற் றரைகான் றனவால். (உசா)

ஏக மாயெழுந் துவரிநீ ரொங்கெலந் திரவி
மீக விந்துவித் துத்துவாய்த் தொருங்குநீர் பிடித்த
மேக மாணிலை மலையனை வெற்பமர் விபின
மேக லந்துமோற் பான்றலைத் [illegible] [illegible]யும். (உஎ)

வெற்பி டங்களிற் பொழிந்தன வெண்மனைக் கரும்புங்
கற்பி டங்களிற் பொழிந்தன கனியளம் பிணருஞ்
பொற்பி டங்களிற் பொழிந்தன புனலரா சமரு
மற்பி டங்களிற் பொழிந்தன வமைவிளார் சொடைபோல். (உஅ)

யாரும் பாவுமின் குளிர்ச்சியொத் துறசெயு மெதிரி
யாரு மன்றலி னருட்கொடை தெரியவாங் கெவர்க்கு
மோரும் வாசக தீக்கையென் காதல்வாக் குதவி
நேரி லின்பருள் கௌணியர் குலமணி நிகரும். (உகூ)

விரியும் வெண்டுகில் போர்த்தெனக் குளிர்க்குவெள் ளருவி
பரவும் வெற்பெலா மன்னது படர்ந்திழி யசைவு
மரவ முங்குளிர் பின்னரு மாற்றொறு துடற்கண்
வருந டுக்கமு மதிற்படு மொலியென வயங்கும். (௩௦)

சோதி மென்கொடி படர்தரத் தூயவெண் பிறைதான்
மீதி லங்க வம் பணிபல சூழ்தர விளங்கும்
பூத ரந்தனி னின்றிழி யருவியப் புராரி
சீதமாமுடி நின்றிழி கங்கையிற் றிகழும். (௩க)

## குறிஞ்சி.

வென்றிமால் விடையோன் வீற்றிருப்பதுவுமேவுதன் றுய்பிறந் தகமு,மன்
றலார் கோதை வள்ளிநாயகியை மணந்ததுங் கனந்தரு வரைக, ளென்றவா
ஞ் சையினோ டெயினர்சீர் விழாக்கொண் டேத்துமகோத்திரக் கிறையாய்க்,
குன்றுதோ றாடல் புரிந்தெமை யாளுங் குமரவே ளமர்தருங் குறிஞ்சி.

அருவியுண் மூழ்கி நீறணிந் தெனமற் றதுபர வுறப்பெறீஇ யளியாம்
வான்விழி மணிபூண் டசைவுற றோற்கும் வாய்மையான் வறப்பினும் வளமே
தருவரை யினங்கண் முருகருள் சார்ந்து சதமகற் பொரவெழுந் தனபோன்
மறு[illegible] வானிற் கரத்தமர்க் கழைக்கு மாறென வரையசைந் தொலிக்கும்.

இறைவனா ரண்டை வனங்குறித் தார மெரிமணி யாதிதொட் டெறிதன்
மறையுப திடத மியாவுமெண் ணில்லா வாய்மையாற் பதியிலக் கணங்கூறும்
ளறைபொருள் சிவனே யெனக்குறித் தென்னெஞ் சகன்றிடா நாவர சாற்
றிறலுழ வாரத் திருப்பணி யதனை விழைதர நினைப்பிக்கு மாங்கே. (சஉ)

ஆரநீள் காண்மே லாம்பல்வெண் மருப்பார்ந் தமைதரு மிதணமே றெயினர்
நாரியர் குரலார் பலாசனம் ‡ தாப்ப நண்ணியா யோவென விசைத்தாங்
கேரிய லரித மரதனந் தாள மெறியவு மினத்திசை குவித்துச்
சார்சிறை யினங்க டுங்கனி யமலை தாமென வணிமையிற் சார்வ. (சங)

வெள்ளிடை வெயிலிற் றண்ணிழல் காணு வெகுண்டுபாய்ந் தவனியின் வெண்
டுள்ளுறக் கீண்டு சென்றுசென் றிபமாங் குயர்கனி நீழல்புக் குரங்கு, [கோ
மள்ளிருண் மலந்தான் வேறுகண் டளவி னப்பகை தெறும்வகை யாற்றித்
தெள்ளுநன் னெறியிற் சென்றரா ணடிக்கீழ்ச் சிவானந்த மடுக்குநர் செயலின்.

பெருவலி மறவர் கயமுனிக் குலங்கள் பிணைத்துவிட் டேனலின் பெரும்போர்
சரிவுறப் பாய்பி யவற்றினோ லாசு தணத்தியத் தானியங் கவர்வா
ரருமணி யிடற்றோன் மாயையைப் புணர்த்தி யாருயி ரிடைபுண ரழுக்காங்
கருமலமகற்றித் தூய்மைசெய் தவற்றைக் கவர்ந்தடி யிருத்துதல் கடுப்ப. ()

அருவரை மிசைக்கீ ழிழிவது மருவி யாங்குமே லெழுவது மருவி
குராலரி குறியாய் மலர்வதும் வேங்கை குறவர்க ளுடுப்பதும் வேங்கை
தெரிவைய ருவைப்ப மலர்வது மசோகஞ் சேர்ந்தவர் சிந்தையு மசோகங்
கருமுகி னிகருங் குறத்திய ரளகங் கார்முகில் பொழிவது மளகம். (சசு)

மலைவருங் குறவர் மாற்றமுங் கடிய மாதர்க ளோதியுங் கடிய
கொலைவரு நிலைய விழிகளுங் கொடிய கோப்பமை நாப்பணுங் கொடிய
மலர்தழை நாக நிதம்பமு நாகம் வகையணி நகிலமு நாக
நலநிறையினிய மொழிகளுங் கிளைக ளயமுறு புயமும்வண் கிளைகள். (சஎ)

---

‡. பலாசனம்-கிளி.

## முல்லை.

இனிதுறப் படைத்தல் புறந்தர லழித்த லென் றிவற் றிடைத்தொழில்செய லா,னனிமகிழ்ந் ததனை யுயிர்க்கெலாம் பொதுவாய் நவிற்றலா லிடையனாற் பொதுவ, னெனவுரை தருமா லப்பெய ருடையா ரிந்நிலத் தவரென வெண்ணு, முனிவற வனைய நிலக்கிறை யாகி முதமிகப் பயில்வது முல்லை.

வானுறு மண்டர் தாமொரு பாலை மதித்தமு தளித்திட வாழ்வார்
கானுறு மண்டர் மகளிர்தாம் பாலைக் கடைந்திழு தளோநவ நீதந்
தானுணத் தருவா ரன்றியும் பிருந்தை தனைமணந் துவத்தலுந் தருமா
லானபா னாலை யோபுவி வனமோ வாங்கவற் கார்வமிக் களிக்கும். (௪௯)

காசையாங் கொருபாற் செருந்திமற் றொருபாற் கடிமலர் செறிந்துநின் றிட
தேசமர் பலாச மிடைமதி முடிமேற் சேர்வுறத் திகழ்கரு முசுவொன் [ப்பூங்
ருசறு நிழற்கீ ழுறங்குற வமர்த லரியயற் கிடையனல் வெற்புங்
காசறு மிரண்டுந் தருவிடு மேனத் தெகினத்தின் காட்சியுங் காட்டும்.(௫௰)

மறைத்தகார் முகிலைத் தாத்தலுஞ் சூறை வயங்குமோர் சோதியந் தாரு
மறைத்தகா ரெழினி வாங்கலுந் தளியின் வயங்கு மாதீபமே மானு
மறைத்தனீத் தொளியை வயக்குமச் சூறை மாணவ ராணவ மாய [வயங்கும்.
மறைத்தனீத் தவர்மெய்ப் போதமன் விளக்கு மாண்மையோ ரென்னவும்

பொதுவனோர் புதல்வன் வங்கிய மிசைத்தோர் புடையுறப் புதுமதி சிகை
மேற்,பதிவுறப் புதுப்பூந் தளவமேற் படர்ந்து பாதியா வரிப்பவோர்சிகைமேற்
கதுவுற வமர்பூங் கடுக்கையிற் றொருவாக் கற்றைமே லணியனுமை யோடும்
விதிதவா னுயர் குழலிசை கேட்டு விடையிவர்ந் தணியுறல் விழையும்.(௫௨)

பன்னிற வேனல் சாமையெள் ளிறுங்கு பகருநீன் மாடமுற் காதி
மன்னுதா னியங்கள் பலநவ மணியின் வரையின மெனத்திகழ் தருமிந்
நன்னில மாக்க ளொன் றுமீ தியங்கி ரவிமுதற் கோள்களுக் கிரங்கி
யன்னவைக் குரிய மணிகளி னிளைப்பாற் றுதன மமைத்தன ரென்ன. ()

வேறு.

ஆய்ச்சியர் குழலங் காசை யவரிடை யாயர்க் காசை
பூச்செறி கடுக்கை யாசைப் புதுநிறம் விரியு மாசை
காய்ச்சுபால் கடைதந் தேங்குங் கலிதிசை யெட்டுந் தேங்குந்
தூச்செறி தளவு நாறுந் தூரெலாங் கீர நாறும். (௫௪)

முலைவரு குடத்தி னார முலைவரு குடத்தி மார்தம்
பலினிரை தளவை நேரும் பாந்துகா தளவை நேரு
மலர்விழி களவை யேயு மாண்குழல் களவை யேயுஞ்
சொலுநடை பிடியை யாருந் துவளிடை பிடியை யாரும். (௫௫)

## திருநாட்டுச்சிறப்பு.

உரப்பிர வாகங் காணுபு மள்ள ருள்ளமிக் குவகையர் இணையி
னிரைப்பொடு வறுமைப் பகைமுடித் திடுகூழ்க் கிதந்தர மடைதிறந் தியக்க
வரைப்பறு கால்க ளிடைப்புகுந் தனைய வான்பயிர் வளர்க்குமந் நீத்தங்
காப்பறு வழுதி படைக்குநீ ரளித்த கண்ணுதல் கமண்டலங்கடுக்கும்.(௬௪)

அலப்படைபுயங்கொண்டவீ முதற்பாடி யயின்றவ னயந்தமுன் னவன்போ
னலப்படு கரிற்போய்த் திருத்தலத் திறைசெய்நடநினைந்தனர்மடிப்பவர்போ
னிலப்பட வொருகா லூன்றுபு தூக்கி நின்றொ ருகாலுகத் திருபால்
வலப்பகட் டெருத்தி னமைத்தனர் பூட்டிவரம்புற வுழுவரான்மள்ளர்.(௬௫)

வேறு.

அலந்திதேய் வுறக்களம ராமுற வுழுவாரவ் வகிதமேற்று, நிலவுரியபொ
றையெனுங்கா ரணப்பேர்தா னிடுகுறிபோ னிகழ வாய்ந்த, நலமதனுக்கிசை
யகனி பலன்றருமக கழனிகளி னயனுங் கெண்ணிப், புலனுறப்பின்னிதருஞ்
செய்வார் போல்விரைந்து பரம்புகைத் தொப் புமைசெய் வாரால். (௬௬)

வால்வளைகள் சால்வழிச்சென் றுழுவர்காக் குதவிபுரிவயல்க டோறுஞ்,சேல்
வளையங் கணத்தைநவ நீதமெனப் பதப்படுத்தித் தேவர் கோமான்,கால்வளை
யுமுளத்தினராய்க் களமர்நன் னுட் கொண்டுவிதை காத்திற் கொண்டு,கோல்
வளைக்கை யுழத்தியர்கள் குரவையிட வித்துவிழாக் குலவச் செய்வார். (௬௭)

தெளித்தவிதை கான்முளையைக் கான்முளையிற் கண்டுழவர் சிறப்ப வுள்ளங்
களித்துரிய தொழில்புரிய விதழ்விரிந்து வளர்ந்துமர கதத்தி னன்ற
வளத்தகடு பதித்ததெனப் பாவாற்றி நிரைத்ததென வம்ப லோர்கள்
கிளத்தொருநாட் டிங்களென வுழவர்களற் புதமதெனக் கிளர்வ சாலி.(௬௮)

உளமகிழ வொருவாம லுடனூட்டி வளர்த்தாலு மொருப தாண்டி
னளவுறிற் றம் புதல்வியரைத் தம்மனையி னகல்விக்கு மறிஞர் போல
வளருமிளஞ் சாலிகள்பேர்த் திடும்பருவ மருவுதலு மள்ளர் மாதர்
விளைவுறுநாற் றங்காலிற் கடிவினையைக் கடிவினையம் விளங்கச் செய்வார்.

தத்தமநற் பயனுதவா வேனையிடங் களில்வாளா சார்ந்து நின்ற
வுத்தமநற் கோள்கணற்பார் வையிலெனுடமே காதசத்தி னுறுமா போலக்
கைத்தலத்திற் பறித்துநட வுறுஞ்சாலி வளர்ந்தொன்று கணக்கின் றாகும்
வித்தகர்கைத் தானமெனப் பின்றருபல் வளன்குறியால் விளங்கக் காட்டும்.

வயலுழுவர் பதம்பகரக் கடைசியர்கண் முதலவய வங்க ளொருஞ்
செயலெலவனும் முரங்காண்டு மெனத்திருகு சினஞ்சேக்கு சிந்தையார்போற்
பயமருவு நீலமுன்னு மருவலரைப் பாற்றியசெல் பரிசி னோராய்
வியல்வளைவென் றிடுமொலியின்மிகமுழங்கு கழனியெங்கும்விரவினரால்.

உலகமொருங் கருடாதை யொளிர்குரவன் வேதியனென் றுயர்ச்சி பூண்ட
தலைவன்மலர்க் கட்குடியன் சாற்றுமவன் றாதையிடைச் சாதி யாசை [ன்ப
வலிகொடுசெய் செயல்பலவெம் மகபதிவெள் ளாம்பன்மிசை வரத்த னை
நலனிலதென் றெவரிகழ்வரென்பார்போன் றுறுகள்ளு னயந்தாரன்னோர்.

கனதனத்தை நிகர்வதியட் காண்டுமெனச் சினந்திருகிக் களமர் மாத, ரினவ
ளைக்கை யாற்சாய்த்தாங் கீர்ம்பிழிசார் குடஞ்சாய்த்திட் டிலங்கு வள்ளந், த
னையும்வசி யார்பொழுந் தகைமையினம் மதுவாக்கித் தங்கைக் கொண்டாங்
கனையமதுச் சிறுதுளிதொட் டயலெறிந்து வாய்மடுத்திட் டயில்பமன்றே.

போதுகெறு மொழிகேட்டோர் போதலெனல் வருதலுக்கும் பொருளென்
றோரு, மதுணர்வி னார்போல மொழிந்தார்பாற் புகுவர்மயன் முதிர்ந்து தீசி,
மாதிரகின் றழைத்தார்பால் வரக்கருதி யவாசிநெடு வழிச்சென்றாங்கோ,ரோ
திமநேர் கண்டெனையின் டுறவிளித்தி பெண்கொலென வுரைசெய்வாரால்

தகாமிலை முலைத்திமிர்வார் தாளவடங் குழற்சூழ்வார் தங்கை வாகுகி
முகுரமதன் புறநோக்கி முகந்தோன்று திறப்பணித்தா முந்திற் றெறகொல்
பகர்மினெனக் கலவ்வெதிர் படர்குநரவ் வாடியிற்றம் முகமுன் பாரா
நகுமதியென் றனைத்தழடி நயப்பர்முகந் தோன்றிலதென் னலிவு சோர்வார்.

தொல்லுணர்வற்றின்னணம்பல்சொல்விளம்பிச்சொல்விளம்பிதுய்த்தமன்ள
மெல்லியர்பற்பலசெயலும் விகற்பமுறக் களியாட்டின் மிக்காரேனு [ர்
மொல்லுவதீ தெனக்கலைவீட் டுறப்புங்கா ருணர்வடக்கி யோகக த்தைக்
கொல்லுபுமற் றனைத்துவளர்த்துச் சிவபோகம் விளைவிக்குங் குரவர் போல. ()

விளைவுபெற விதியுடைய வியன்பயிருக் கிடப்புரியான் விரவி விம்முங்
களைமுழுதுங் கட்டதனைக் களித்தெழுந்து பலன்றரச்செய் காட்சி யாங்கே
வளர்வுறுநல் விதிப்பிசன மறைமுதனூல் புகல்சைவ மாண்பி னோங்கத்
தளர்விறிய வெனப்புனமதஞ் சாடிநீ றாடும் பெரியர்செய றன்னைக் காட்டும்

கடைசியர்கா லொப்புணரா வெதுண்டனபோ லுழக்கவழி கமல மாதி
யிடைமலர்க டமைக்கரத்தின் வீட்டுதல்கண் ணுதலோன்முன் விளம்பி
யாங்குப், படைகரத்திற் பரித்துலவிப் பாரதமாப் படைஞர்தமைப் படுத்தப்
பார்த்த, னடுசிலைகொண் டனையருட லழிதாக்கொன் றுங்குவக்கு மமைதி
போலும்.
(எஅ)

கடைசியர்கண் மலருமிரு கமலமுதற் காட்டவிரு கமல மன்ன
நடையினரு கடையவிரு நயக்கமலம் வயற்கமல மொன்றை வீட்டு
மடலபிம னொருவனுயி ரகற்றிடவொவ் வோர்செயலோ ரொருவ ராற்றித்
தொடைநிகழ்ப் புயவீரர் தொடர்ந்துபலர் தடிந்தவினைச் சூழ்ச்சி போல.

வலமிகுவா ளவுணரிறை வாளவுருக் கண்டிரிந்த வானோர் போல
வலவனளை யுட்புகுவ வைந்தொடுங்கி னவாகி யாமை மாய்வ
குலவுமினவ ராலிரிவ கொழுங்கயலி னொழுங்கயலிற் குதிப்ப மாதர்
நலனிறைசா லுவைமுனுறுப் பணைக்குடைந்தே யிரிவவென நயப்பமள்ளர்.

பிறந்தகத்திற் றணந்துசெலீஇ மணந்தகத்தி லணைந்துமருஉம் பேதையாரிற்
சிறந்தட வுறுகாலி தணப்பறியா வன்றிலெனத் தெண்ணீ ரொன்றும்
விறந்ததுணை யொருகணமு மொருவறமெய் மருவுறநன் மேனி காட்டிப்
புறந்தான்முற் றொழிலுறக்கொண் டறந்திகழக் கருப்பமுறீஇ ப்பொலிவ மா
தோ. (அக)

கருப்பமுறீஇ வளர்சாலி வலாரிதரு வரப்பேற்றாற் கருக்கொள் காலும்
பொருப்பமுறழ் முலைநெருங்கப் புருடர்தமைப் புணரமகிழ் பூவை மார்
உருப்பமுற வாகிநிறை நலனெழிக வுறுமையுட னுறுதலாக [போ
விருப்பமுறத் தழுமனகத் தூடன்கலந்தே கருவீன்று விரிவ மன்னோ. (அஉ)

பூதிநிறை யானுருவம் புரைதரவெண் ணிறமருவிப் பொருப்பன் மாது
பாதியுமால் பாதியுமாய் நிறைதருமப் பானுருவிற் பசந்து பின்ன
ராதியவ னியலெழில்கூ ரரியதிரு மேனிநிற மதுபோற் சேந்து
பதிலகச் செறிந்தெழுந்து விளங்குறுதண் ணெற்கதிர்கள் விளைவ மாதோ.

இலகுபொரு ளணிபடைத்தே மெமக்கெதிரின் றெனவிறுமாந் திவறன்
மைக்கோர், திலகமென மருவுபுதுச் செல்வரெனத் தலைநிமிர்ந்து சிவன்ற
றாளைத், உலகமென வுணர்ந்தடங்கி யுயிரொனினுங் கொடைபெரி தென்று
றுதி வாய்ந்து, தலைவணங்கித் தாழுவக்குந் தகையரெனத் தலைவணக்கஞ்செ
ல்வ சாலி. (அச)

வேறு.

பிரிவினிற் கணவா வனலுமிழ் பிறையைப் பேதுற வங்கையிற் பிடித்த
பரிசெனக் குயங்கை கொடுகடை சியர்தம் பவளவாய் வள்ளைபா டிறநீள்
விரிகதி ரரிந்து பொருசமர் புரிந்து வெற்றிகொள் வீரர்வெங் களத்திற்
பரிமுக நிரையம் பொடுநிலங் கிடத்தும் பான்மையிற் றரைப்படுத் திடுவார்.

வேறு.

அரிபடுத்த வரிகடமை யாடவர்க ளரிவையர் களரிய வாரஞ், சொரிதரக்கொ
ண் டேகியிவை சூழ்ந்துபல வரைகளெனத் தொகவப் பூமி, வரைநிலங்கொ
லெனக்குவிப்ப மற்றவ்வா னிமிர்ந்துறலவ் வலாரி தங்கட், கருள்பலமுற்
றவர்க்குணர்த்திப் பெறன்மாவென் றுழவரவ ணமைத்தல் காட்டும். (அசு)

மதிநிறைவற் கிவைபகையென் றிரும்புகளின் றலைதடிந்தாங் கினிதுமள்ளர்
மமுறுவல் வரிதொகுபோர்க் கதிர்முடிக டமைநிலத்திற் கதுவச் சாய்ப்பா
ரமைவுறுமச் சிகரியுறு மம்புதங்க ளதனெடுங்கீ ழடைந்து சூழ்ந்தாங்
கிமைதருமந் நெற்சூட்டி னிடைச்சூழக் கவரிபிணைத் தியக்குவாரால். (அஎ)

உடலினுயிர் வேறுபடுத் திடலன்றும் மிறைதொழிலீ றுஞற்ற நீவிர், கடவி ரென்றுங் குறைத்திடல்போற் களமர்புகல் பாட்டினுளங்களித்தம் மேதி, நட வுறுநெற் றாட்டினைமுற் றழுக்கியவை யொழிந்ததற்பி னயர்தாங் கண்ணோர் புடையொழியப் பலாலமிரை புடைத்தொதுக்கி நெற்றிறள்கள் பொருப்பிற் சேர்ப்பார். (அஅ)

சேர்த்திடுபொங் கழிப்பதடி செயற்காலி னொதுக்கிமணித் திரள்கள் கூப்பி ச், சீர்த்திகரு மூர்க்காணித் தெய்வதமற் றவர்க்குரிய திறத்தி னல்கி, யார்த் தியுள மிகவளர்தவ் வளவையினி லாறினுளொன் றரசர்க் கீந்தாங், கோர்த்தி டுமெந் தியசாலி யினைச்சகடத் தியக்குபுதம் மிடத்திற் சேர்ப்பார். (அகூ)

வேறு.

செறித்தவை தம்முட் சிலமுத லோடு நிகழ்வுறச் சேர்த்தனர் பலதாங், குறி த்திடு தெய்வம் விருந்தொக்கல் பிதிரர்கொளவெனவமைத்தனர் சிலவு, மறி த்திடு விதைக்கென் றமைத்தனர் மேலும் வயங்குமத் தொழின்முயன் றிடு வார், பிறத்தவை கருமமலந்தின்முக் கோயாம் புண்ணிய வினைச்செயற் பொருட்டாம். (கூ0)

ஒண்கதி ருயர்போ ருறுமுகி லுழுவ ரோதுசா தரங்களோ டுகளும், வண்கதி லாளை மருவுக மடமென் வாண்முதல் வயப்படை தாங்கித், தண்கழ னிகளாந் தந்திரத் தலைவர் தம்மொடுந் தண்பனை வேந்த, னெண்கொள் போர்க் கோல த்தென்றுமின் றிடலா லெறுழ்க்கலி யெய்தலின் டிலைபால். (கூக)

இரும்புலி யெவர்க்கு மிடர்புரி யிரதிக் கியல்பறி யெழிற்கையில் லிணமாங் கரும்புகள் களமர் கருவியங் கரத்தாற் கணக்கில கண்டமாய்க் களத்தி னரைந்தரு வழிந்து மனந்தர மணமா வடைப்படு மடாதுசெய் தவர்பின் பரிந்துளம் படாது படுவரென் பழமை பலித்தெனப் பாலையர் பகர்வார். ( )

செழுவிய கரும்பின் சாறடு தூமஞ் சேண்புகும் தம்புகழ் செறிய வுழவர்நம் முடலுக்குறு திசெய்தனரென் றுவகையினன் றியோர்ந்தார்போற் பொழிவமும் மழைக் களன்றுமாங் கபுத்தி யுருவ மாநவ புரியிற் றழுவுசில் லறமும் பலபல ஞுடனே தருமெனல் காட்டிறுந் தகைபோல். ( )

நெய்தல்.

ஈதரக் குறையு மேனைய பொருள்போ லெஞ்சுறு திருநில முழுதுஞ் சீதளம் புரிவா னிறையவாய் மடுத்துஞ் சிறிதுந் தான் குறைவுறாச் சீர்த்தா மாதரந் தருநம் மூர்திபற் பலசா ராழிசூழ் நிலைய தென்றமர்ந்து நேதகு வருணன் புரந்திறை யாகி நிலையுறப் பெற்றது நெய்தல். (கூச)

ஆங்குறை நுளையர் புன்னைநன் னிழலே யவிரொளி மரகத விதானந் தேங்குநித் திலம்பொன் றுவர்முத லவற்றாற் றிகழ்தரு சினகர மாகப் பாங்குறு சுறவின் மருப்பவ ணிறுவிப் பரிந்துபல் லிளையொடும் பயிற்று மோங்குறு சிறப்பேற் றலையர சவர்க்கவ் வுலவைநின் றுன்னியாங் குதவும்.

பந்தவர் சேரங்கின் பாங்குசெல் லம‌லை படவினிற் கடல்புகுஞ் சும்மை
விரவுறு சாலம் வீசகம் பலைபன் மீன்கவர்ந் தீர்த்திடுந் துழனி
திருமிவர் தவைதண் கரைசொரி யரவந் தெரிவையர் கொடிகளோப் புறுசீர்
தரமென வுணங்கல் குவால்செயா குலத்தாற் சலதிபற் பலவெனத் தயங்கும்.

அலையெறி வளை தன் றலையுறத் துகிர்சென் றாங்கொரு பாங்கினிற்படரக்கும்
கலைமதி கிரண முழுவதும் போர்ப்பக் கவினிருன் மற்றொரு பாலி
னிலவு புன் னைக மிந்துசே கரன்ற னேமியங் கைக்கொளு நிறையார்
தலைவியோர் பாலி னிலவிவாழ் வுறுமத் தவளநீற் றுருவமே தகையும்.(கஎ)

வரகதி பலசூழ் தரமிகு நாலை வாயுதித் தாயதின் மறித்தும், விரவுறு புனித
மருவலின் விதலை மிலைந்தன னைமையிகழ் விமல, னாலையுற் றியானோற்
குவமினி யமல னமை முடிக் கொளுமென நயந்தாங், கரியவெண் டுகள்போ
ர்த் துரியகண் மழைகார்த் தமருமாங் கலர்ந்தமுண் டகங்கள். (கஅ)

அருமறை முதலா மெத்துறைப் பொருளு மொருதுறைத் திரட்டியாங் களி
க்குங், குரவர்தஞ் செயல்போ னலிரண் டெனுங்க குபங்களி னுறும்பொரு
ளையும், விரிதரு மிடத்த கலத்தகத் தமைத்து விரைசெல விற்கொணு
விரிநீர், கரையினிற் றிகழ்நா வாய்களா வளிப்பக் களித்தினி துவப்பவக் க
ரையார். (கக)

குயின்மழை வளத்தின் விளை தரு முறுபைங் கூழெலா மம்மழை யிலையேற்
செயலற வாடு மிவைதரு முணவெஞ் சேர்க்கைபெற் றேபயன் செயுமவ், வி
யல்பின வதனுற் றலைமைகொ ளுமுழ மிவையென வெய்தொணு தென்னுப்
பெயல்வளம்வேண்டாதியலுமுப்போங்கல்பெருகுறக்குவிப்பாருமணர்.

பாலை.

தனக்கென நிலமொன் றுறப்பெறு தென்றுந் தங்குறு மாலைய தொன்றோர்
வுணற்கருந் தழற்றும் பாலையென் றொழித்த லொல்லுமோ வுண்மைதேர்பெ
ரியோர், மனக்குறு மேனுங் குற்றங்க ணீக்கி வருகுணங் கொண்டுவப் புறுக
வெனக்கழ றுவரா லத்தகு பாலை யிடைக்குணம் பலசிலவிசைப்பாம். (௪0க)

வாகைதான் பெறவேண்டு நர்களவ வெவரும் வந்தனை தந்துதம் மனத்த
வாகைமேற் கொளவாங் கருளுமம் பணத்தி வாகையீ தால்வயக் குதலின்
வாகைபாற் சூழ வாங்கன முறையு மறவர்தங் குலம்புரிந் திறைஞ்சும்
வீரகையா லயத்தி னமர்ந்தினி திருந்து வாழ்வுறப் புறப்பதப் பாலை. (௪0உ)

தனநிற வலைய வளிமுரன் மலர்க டாங்குபு கன்னிகா ரங்க
ளினமுற நிற்றல் களவொழுக் கத்தி னியன்றிடு தலைவரோ டெழில்சால்
வனமுலை மகளி ரணிகளை மறந்தும் வருவதில் வழியவர்க் கீது
மெனவிலை பகர்வோர் கொப்பணி யணியங் கேந்துபு நின்றிட லொழ்மையும்.()

செவிலியர் தாய ரிகுழலையர் குழவிற் றினம்பயில் செயனினைந் தொருகாற் றவளொடு மாங்குத் தனிபுகு மடவார் தாம்வெருக் கொடுதியங் குறலிப் புலியிடை யுறினும் போக்குது மனைய புன்கணென் றுன்னியோ குரவங் கவிரித ழியர்பற் பலர்தமைத் தாங்கிக் கவினுறத் திகழுமக் கடத்தில்.(கoசு)

அரியவா மலக மீந்துதம் பலங்க ளாங்குறு மவர்விடாய் பசிநோ யிரியவாங் காங்கு கனியளித் திடவு மெய்துறு தமைப்பல தென்னைப் பானுகர் கபோத மவணிருந் தொலிசெய் பரிசினை யுணர்ந்திடார் பதிகர் தெரிவையர் வயாவே தனையொலி யென்னுச் சென்றவட் காணுறூர்திகைப்ப

திணைமயக்கம்.

கணிமல ருகுத்துப் பாடியின் மனைகள் கனகமா ளிகையெனக் காட்ட, வணி மலர் செருந்தி செறித்துவெற் பெல்லா மாடக வரையென வாற்று, முனும் வரைக் கிளையொன் றிறத்துமென் பாற்போ யும்பலொன் றும்பலை மாறென், றணுகினின் றேச்சத் துண்ணெனவலமீர்த்தாங்குறுங்களமரின்படைய.

கவரிதண் கழைவாய் மென்றுகொண் டேகிக் கணிநிழற் களிற்றென வுறங்குந் துவரமற் றதன்வாய் வழிமது நுகர்ந்த சுரும்பின மெய்தற்பூஞ் சுரும்பிற் குவகையிற் குறிஞ்சி பயிற்றுவ கிரையா லுலைந்ரு மாம்பலிற் பமரந் திவள்சுனை மலர்சூழ் பிரமரம் பயிலச் செவ்வழி பயிற்றுவ செறிந்து (கoஎ)

கழைவெடித் தொளிய நிலத்தில முகுப்பக் கபோதகம் பரவென நுகர்வ தழைதரு கோங்காங் கருவியா மகட்குத் தையல்கூர் காதணி தருவ வுழைமறி மேதி செருத்தலி னுகைப்ப வொழுக்குபான் முலைப்புதல் வளர்ப்ப தெழிகடன் மூழ்கி யுறுமவர் பாற்பொன் றேக்குவ மேக்குயர் செருந்தி. ()

பூதிசேர் மாலி னுருவெனப் பொடித்தூம் பூவைமேற் கைதைபுன் மேய்மான் சீதம்வேட் டமரி தளிப்பரி யெனப்போந் திரள்கனி யுகுத்துவேம் பிதழிப் பாதலத் திலிங்கம் பலவெனக் காட்டும் பைந்தட வாளைமீன் றுழை மோதவா சினிமா வரம்பையி னிரத மூரிநீர்ப் புலவினை முருக்கும். (கoக)

திரையெறி தரளம் பூகத முகையிற் செறிதர வேற்றுமை தெரியார், புனை தபக் கொழித்துச் சிற்றிலாங் கிழைப்பர் பொய்தலாற் றுழத்தியர் பொலிபூ மருதவண் கிளைகள் குரவநன் மலர்மேன் மாதர்கைக் கிளையென வயங்கு, மெருவைமீ னுகணெற் போருறீஇக் கழுக்குன் றிடைக்கழு கென்னுமா றி லங்கும். (ககo)

எண்ணுபு குடத்திற் கயல்விழி யுடனுங் கேகிநெல் லியங்கனி வாங்கி, நண் ணுமத் தொகைபின் பரத்தியர் மாறி நல்குவா ரிருகயல் குடத்திற், கண்ணு றூர் திகைப்பர் குராமலர் புன்னு கர்நிழ லுகுத்துறப் பாத, குண்ணயிர் தி மைமுன் போற்றனி யுறுள்பல் லுருக்கொடுற் றனள்கொலென் றுவப்பு. ()

மாலையிற் றிருத்தலத் தெம் வரதனை வணங்கப் பெற்றோர்
பாலுறு மின்ப முற்றும் பருகுவ ரநந்த யாம
வேலையிற் பணியு மேலோர் விமலனுண் மலர டிக்கீ
ழேலுற வமர்ந்து வாழ்வே ரின்பமுற் றிருப்பர் மாதோ. (கக)

சீதளி நாதன் கோயில் சென்றுமுன் பணிந்து நின்றாங்
கேதமி றுதிகள் பல்வே றிசைக்குந ரெய்தும் பேற்றி
லாதிதன் மலர்வாய்ப் போந்த வாரண மன்பி னோதுங்
காதலர் பத்துநூறு கதித்திடும் பலன்மேற் கொள்வார் (கஉ)

அம்மறை நான்கி னுள்ளு மதிகமா மெசுர்வே தத்தைச்
செம்மைகொண் மனத்த ராகிச் செப்புந ரயுதஞ் சேர்வர்.
பொய்ம்மையி லதனி னுட்பட் பொருந்துசற் காண்ட மோதுந்
தன்மையர் சரதநூ றாயிரமடங் கதிகஞ் சார்வார். (கங)

அருத்திகொ ளன்ன காண்டத் தாற்குறு வணக்கம் வாய்ந்த
வுருத்திர மன்பி னோது முவகொரு கோடி சேர்வர்
கருத்துறு மறைக ளென்னுங் கன்னலிற் கோது நீத்த
திருத்தகு மருளை யாகுந் திராவிட வேத மோதும். (கச)

தொழுதகு மன்பர் பேற்றைச் சொல்லுதற் கியானு மாற்றேன்
முழுதுணர் பரமன் றானு மொழிவனோ வளவின் றென்பான்
கெழுதகு முனிவிர் கேண்மின் கிடைத்துமுன் றொழுதுமென்று
வழிவரத் தொடங்கு வாரும் வந்தடிபணிந்தா ரொப்பார். (கரு)

இன்னன புரிவார்க் கெய்தை யிங்கண மருளல் சொற்றும்
பொன்னமர் தலத்தெம் மீசன் பூசோப கரணமாகப்
பன்னுறு தூப தீப பாசன மணி யிழைத்த
மின்னுபொற் குடங்க ளாட்டும் வியன்மணிக் கலச மேலும். (கசா)

இன்னிசைக் கண்டை யாதி யியம்பல வெழிற்பொன் னூடை
வின்னிரைக் கலங்கள் சொன்ன வில்வமா லிகைமுத் தாரங்
றொன்னுறு மணிசெய் கண்டி கோளகை குண்ட லங்க
ணன்னர்மெய்க் கவசந் திண்காழ் நறுங்குற டுரிஞ்சு தேய்வை. (கஎ)

'ஆகிய வளிக்கு மன்ப ரலர்பல தொடுத்த லங்கல்
போதுதோ றமையச் சாத்தல் புலரியி லெழுந்து மூழ்கிச்
சோதனிப் பணிமெ ழுக்குச் சுடர்விளக் கிடங்க டோறு
மேதக விடுத னந்த வனமவை விதியாற் செய்தல். (கஅ)

இவைமுதற் புரியு மன்பர் திருத்தலத் திறைவன் கோயி
னவமுறக் கிலங்கள் போக்கி நவமணி சாத கும்பந்

திலள்சுவைத யிட்டி கைம்முற் பொருள்கொடு திருந்தச் செய்து
நவபுரி நாம மேன்மேல் விளங்குற நலஞ்செய் மேலோர். (௧௯)

எஞ்சலில் பொருள்க ளாட்டற்கியைவன வன்பி னீந்து
மஞ்சனம் புரிவிப் போர்கள் மௌவலம்மென் முகையின் வான்மை
யஞ்சுவை யோத னம்பற் பலவகை யபூப வர்க்கம்
விஞ்சுற நிவேதிப் போர்க ணறும்புகை விரவச் செய்வோர். (௨௦)

இயம்பல வியக்கு விப்போ ரிரும்பொனான் மணியாற் செய்த
நயந்தரு திருத்தேர் மீது நல்விழா நடத்து விப்போர்
வியர்த்துளை யிவர்முன் னான மெய்த்தொண்டர்க் கெந்தை யீயும்
பயன்றனை யெம்ம னோராற் பகர்தலெங் குணர்வான் மிக்கீர். (௨௧)

வேறு.

இத்தலருண் மூர்த்திநல மின்னுமா வில்லனவென் றியம்ப ஞானம்
வந்தமுனி வரர்தலத்தீர்த் தம்மூர்த்தி நலங்கேட்டு மகிழ்ந்தோ மெந்தாய்
முத்துறைபோர் நடம்புகன்று யவன்பொருட்டாந் நடம்புரிந்தான் முதல்வ
னென்று, லந்தரியாண் டிந்துமுடி யடிபணிந்தென் வினவினளாங் கமல [மூர்த்தி

எவ்விடைத் தருளினா னெவ்வகையி னுவப்பித்தா னெவ்வா றிந்தத்
திவ்வியமா தலம்புகுந்து திருக்கருதன் பேர்நடனந் தெரிசித் திட்டான்
வெளவமுழு துண்டமரர் பயந்தீர்த்த பெருமானே பகரா யென்ன [ரூன்.
வெவ்வமின்மா தவமுனிவீர் கேண்மினென வான்முறையா லியம்ப லுற்

மூர்த்திவிசேடச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௦௦.



## திருக்கைலாயச்சருக்கம்.

---

சிலைய மாதவ நிமிர்ந்தொளிர் செம்பொனன் மேருச்
சிலைய மாதவன் விழியெனக் கொண்டவன் றிருமுன்
மலைய மாதவன் றனைவின விடமிதென் றயர்வான்
மலைய மாதவன் கைலையின் சிறப்புரை வழங்குதும். (௧)

மேருச்சிலைசிலை எனக்கூட்டுக. அமா-இடைக்குறை. அம் ஆதவன் விழி. மலை அமாது அவன்றனை.

திருத்த னாயக னாதிய தேவரெம் முளத்தைத்
திருத்த னாயக னிரங்கெனச் சேர்ந்துநின் றேத்துந்
திருத்த னாயகன் மலரயன் றேடரு முடிசேர்
திருத்த னாயக னிருப்பது திருக்கயிலாயம். (௨)

உளத்தை திருத்து அனாய். எத்தும் திருத்தன் ஆய் அகல் மலர் அயன் தேட அரும் முடி சேர் திருத்தனாய் அகன் எனப்பிரிக்குக. திருத்தனாய் தீர்த்தத்தையுடையனாய். அகன் தன்னிடத்து.

சிந்து மாதவ னாமெனாற் கீரற்குத் திமிரஞ்
சிந்து மாதவன் போலிய றேற்றுவித் துளங்க
சிந்து மாதவன் ஞானவாக் கருள்செயுங் கருணைச்
சிந்து மாதவ னிருப்பது திருக்கயிலாயம். (ரு)

சிந்துமாதவன்-குறுமுனி. திமிரம் சிந்தும் ஆதவன் உளம் கசிந்து மாதவல் கருணைச்சிந்து உமாதவன் எனப்பிரிக்குக. மா-கருமை அது ஆணவ இருள்

சித்த ரங்கமா றுணர்ந்தரு மறைமுதற் றேர்ந்த
சித்த ரங்கமா லகன்முனி வரர்துதி செயுங்காட்
சித்த ரங்கமார் முடியரா னுயிர்க்கருள் செயற்கிச்
சித்த ரங்கமா னிருப்பது திருக்கயிலாயம். (சு)

சித்தர் அங்கம் ஆறு உணர்ந்து, தேர்ந்த சித்தர் அங்க மால் அகல், காட்சி தரங்கம் ஆர், செயற்கு இச்சித்து அரங்கமான் எனப்பிரிக்குக. அங்கமால் தேகவாஞ்சை, அரஙகமான்-சிற்சபையில் நடிக்கும் மகான்.

சிகர மாயிரஞ் சூழ்கன சிமயமுன் யாவுஞ்
சிகர மாயினு மால்பத மாதிசிந் திடினுஞ்
சிகர மாயிருங் கங்கையெம் பிரானருட் செயலாற்
சிகர மாயிருந் தொளிர்வது திருக்கயிலாயம். (ஏ)

சிகரம் ஆயிரம்-அனேகமலைபுச்சி. கனசிமயம்-பொன்மலை. கனம் பொன். யாவும் சிகரம்-மலைகளெல்லாம். சிகரம் ஆய் இரும்கங்கை-சிரசில் ஆய்கின்ற பெரிய கங்கையைத் தரித்த. சிகரமாய்-உயர்வாய்.

தஞ்சு கந்தரம் புடவியின் வாழுயிர் தமக்கே
யஞ்சு கந்தா விடத்தருண் மாதெனா வமர
நஞ்சு கந்தரம் வைத்தருள் சீகண்ட னருதோற்
கஞ்சு கந்தா னிருப்பது கைலையஞ்சைலம். (சு)

தஞ்சு உகந்து அரம்-தஞ்சமாக விரும்பிப் பாதலம். தோற்கஞ்சுகம் யானைத் தோலாகிய சட்டை.

காவு லம்பதி நம்பிமா லாதியர் நனுகி
மேவ லம்பதி வுஞற்றிவெள் ளிபத்துற வேண்டப்
பாவ லம்பதி கத்தினாற் பணிந்துசெல் பாற்றாற்
காவ லம்பதி கங்கையன் கைலையஞ் சைலம். (எ)

மேவலம் பதிவு-விரும்புகின்ற பிரதக்ஷணம் வணக்கம். பா வலம் பதிகத்தினால்-ஞானவல்லபமுள்ள பதிகப்பாவினால். காவு அலம்பு ஆதி கங்கை. காவுதல்-தாங்குதல்.

மீத லங்கணன் கணிசெய வெழுதலின் விளைவுற்
றீத லங்கண வயறிகழ் *மகோதையெம் பெருமா
னோத லங்கண வுலாத்தமிழ் ஞானநூல் கேட்டுக்
காத லங்கண னிருப்பது கைலையஞ் சைலம். (அ)

ஈதலையுடைய வயல். ஓதல் அங்கு அணவு உலா.

சுதி யளித்தன விதழியந் தொடையரன் ஞான
நிதி யளித்தன தருட்கையி னன்பர்க்கு நிகழ்தற்
பதி யளித்தன மனமகிழ் வுறத்தரீஇப் பரம
கதி யளித்தன னிருப்பது கைலையஞ் சைலம்.

தன இதழி-பொன்னிற இதழி. ஞானநிதி அளி. தற்பதிமனம், அளித்து அன்ன மனம் என்றீரிடத்துங் கூட்டுக. தன்னிடத்திற் பதிகின்ற மனம் அளியையுடைய மனம் என்க. அளித்தன்மையுடைய எனினுமாம்.

அனக னம்பர நிருத்தனம் மேயென வழைப்ப
வினக னம்பர னவனையப் பாவென விளித்தா
டனக னம்பரற் றொழுத்தலை யாற்செலுந் தகைத்தாற்
கனக னம்பர மாறொழுங் கைலையஞ் சைலம். (ம)

அம்பர நிருத்தன் வில் நகன் நம்பரன் ஆகிய அவனை யென்க. தன் அகன் நம்பு அரற்றொழு. அம்பர கனகன்-பீதாம்பரன்.

என்னை யாளுடை நாவர சீண்டுல குய்வான்
மன்னி மேல்வரக் கருதியே தன்னைமற் றவர்க்கு
முன்னை யாற்றினிற் காட்டியுள் விழைந்தவா முடித்துத்
தன்னை நாமமப் பதிக்கரு டகையதச் சைலம். (கக)

கரிய கண்டனை தாணையாற் கடிதுவந் தழைத்துப்
‡பெரிய தேவருட் கொடுபுகுஞ் சேரலர் பிரான்சொ
லரிய நான்மறை யாகமத் துணிபொரு ளமைந்த
திரு வுலாத்தமிழ் மணநனி யுலாவுமச் சிலம்பு (கஉ)

பரவை கேள்வர்சென் றெனறியின்முற் பகர்ந்தருள் பதிகச்
சுருதி யாங்கணும் பன்முறை துதிக்குந ரிசைகேட்
டரவ மாதியு மசலமாய்த் தன்மயமாகி
விரவு தன்குண மடுத்துற விளங்குமவ் விலங்கல் (கங),

சிறிது பாணித்த மாலையுங் கரியவ னெனச்செய்
திறுதி யாற்றமுன் னடர்விடத் தினையெதிர் காத்திற்

* மகோதை-சேரர்நகரம்
‡ பெரியதேவர்-திருநந்திதேவர்.

குறுகி யேற்றரு ணம்பிரா னெனமுதற் றொடுசொன்
மறையின் வாய்மைநற் பதிகமொன் றுடையதம் மலையே. (௧௪)

கச்சி கோற்றமர் மாற்கா னுரைத்தவா கருத்தி
னிச்சை யாற்சிவ ரூபமீந் தவ்வுல கேற்றுஞ்
செச்சை மாலைவேள் கௌணியர் சிகாமணி செப்பும்
விச்சை வேதவாய்ப் பதிகமொன் றுடையதவ் வெற்பு (௧௫)

இருந்த வாறடிப் பெருவிரல் சிறிதிறை யூன்ற
முரிந்த ராவணற் குய்வழி மொழிவியா சத்தாற்
றிரிந்த மாநிலந் திருந்தவுட் கொண்டிறை செலுத்த
வருந்த கைக்கொள்சொல் வேந்தர்முப் பதிகமவ் வரைக்கே. (௧௬)

புடவி யாங்கணு முளசிவ தலமெலாம் புகுந்தா
னுடைய பிள்ளையு நம்மையா ளரசுமுன் னுரைத்த
திட முறுந்தமிழ் மறைப்பதி கம்மெலாந் திகழத்
தொடரு மன்பொடு போற்றுசீர் படைத்ததச் சுரும்பு. (௧௭)

வேறு.

ஆயிர விரட்டியான மருப்பயி ராவணந்தந்
நாயக மாக்கொண்டென்று நண்ணுவெள் ளிபம்பல்கோடி
பாயவச் சிகரியாண்டும் படர்ந்தன மிடைந்துசூழ்வ
தூயமெய்க் குடிலையேயத் தோலின மாவமாதோ. (௧௮)

வெள்ளிய கரியசெய்ய விழைதகு பசியபொன்மை
கொள்ளிய னிறத்தவின்ன கோடர மளப்பில்கோடி
யெள்ளிய லகன்றசீர்த்தி யிறும்பத னிடங்களெங்கும்
வள்ளியன் மறைகளேயவ் வடிவமாய் வதிவவாங்கண் (௧௯)

ஆடகச் சில்லிசேர்ந்த வயிரவச் சினங்களார்ந்த
கோடக நிரைகள்பூண்ட கொடிஞ்சிபன் மணியின்மாண்ட
பீடக விடைப்பதாகை பிறங்குசந் தனம்பல்கோடி
சூடக முன்கைபாகன் றொல்வரை யதன்பாற்சூழும். (௨௦)

பதம்பல ரொன்றேயாகப் படைத்தவர் பாணிசென்னி
விதம்பல ரிணைமெண்கு வியாக்கிர மறுகுபூட்கை
கதம்படு மரிமுன்போகில் கவிநா ராதியாமற்
புதம்படு முகத்தராகிப் பூமகன் முகுந்தனாதி. (௨௧)

தேவர்க ளாற்றன்முற்றுஞ் சிந்திடுந் தகையரன்றோ
மேவுறு பதங்கண்மூற்ற விதிக்கவோ ரொருவர்வல்லா

ராவயிற் சூழ்வர்யாண்டும் பூதர்க ளனந்தகோடி
யோவிலப் பூதாகத ருவகையின் மிடைவர்பல்லோர். (உஉ)

கருமமெய் முனிவர்மாதர் கருவமுற் றகற்றுவான்கொ
ளானுரு நோக்கிமால்கொண் டிணைவிழைச் சமர்ந்தமாற்குத்
தருசுதும் பின்றொன்று சாற்றியாங் கவன்பாற்றந்த
வரனுறு மையன்மேவி வாழ்பத மாங்கோர்பாங்கர். (உ௩)

பயன்மிகு வடுகன்வீர பத்திர ஞதியோர்தம்
வயமிகு பரிவாரங்கண் மருங்குநின் றேவலாற்ற
வியனர் சிருந்துவாழும் விரிமணி மாடமேய
நயன்மலி பதங்களோங்கு நவிரமற் றதன்கணோர்பால். (உ௪)

கிரிசையி னமிசமாகக் கிளர்ந்தெழு மனந்தகோடி
வரிசைகொள் சத்திமார்கண் மருவிவா ழிடங்கள்பல்ல
வரியயன் வலாரியாதி யமரர்க ளமரவாங்கண்
விரிதரு மிடங்கள்பல்ல விளங்குமப் பறம்பின்மேவும். (உ௫)

இயவுளர் பதினெண்பாலார் யாவருமீண்டி யென்றும்
வியலிடந் தோறுஞ்சூழ்வர் வேட்டன யாவுநல்கும்
பயன்மலி காமதேனுப் பற்பலகோடி தத்தஞ்
சயமிகு விடைகளோடு தழீஇக்கொடு வதிவவாங்கே. (உ௬)

கற்பகம் பாரிசாதங் கவின்கொள்சந் தானமிக்க
பொற்புறு மந்தாரந்தான் புகலரிசந் தனப்பேர்
விற்பயில் விருக்கமொவ்வொன் றனந்தமாய் விரிந்துபூத்தவ்
வெற்பில்வந் திரப்பாரின்றி விளங்குவ வளவிலாத. (உ௭)

வரையதன் பாங்குசிந்தா மணிக்குவா லளப்பிலாத
மரைநிதி யளப்பிலாத வளைநிதி யளப்பிலாத
புரையறு பதுமராகப் புதுமணிமுதலவொன்பா
னிரைமணி பரல்களாவத் தலமெலா நிலவுமன்றே. (உ௮)

சாதரும் பத்திறனுலுந் தயங்குபன் மணிகளாலு
மேதமில் வேர்பாரை யிணர்தளிர் முகையலர்ந்த
போதுகாய் கனிகளாதி புணர்ந்துள தருவனேக
மீதிகழ் வல்லியோடும் விரிபொழி லாகிமேவும். (உ௯)

வகுளமா வருக்கைகோளி வழைபுன்னை கன்னிகாரங்
குருபமாண் செருந்திசந்து கணிகுரால் பாடலந்தெங்

ககருநா ரங்களூழ லசோகுசண் பகந்தமாலம்
புகலுமின் னவைமுன்னுன பொழில்கண்மேற் பொழிலனக்கும். (௩0)

அகனிலம் பளிங்காண்பொன் ஞன்மாகதச் சோபானந்
தருமா தனத்தாற்சந் பதிந்துயோ சனைவிரிந்து
வகையபன் மலர்கள்பூத்து வயங்குறு மனேகமேல்லை
புகலரு மமரிதன்னுற் பூரித மாகிமன்னே. (௩௧)

மாலதி சாதிமௌவன் மயிலைமுற் கொடிகடாங்கிச்
சாலதி சுகந்தம்வீசு தண்பொழில் கதிர்கண்மாய்க்கும்
பால்நிவ் வசலமேனும் பரந்தசெம் மணியுந்தானு
மேலதிண் கதிர்விளைத்தவ் விருசுட ரின்மைவீட்டும். (௩௨)

பூத்தரு தாதினுற்பொன் மலையினைப் பொழிநருவி
னீத்தவர் தானைபோர்த்த நிலையினைப் பதுமராக
மாத்தகு மொளியாற்பானு வந்துபோ மலையமானுஞ்
சோத்தமா லயன்செய்தாங்கட் சூழுமத் துணையில்வெற்பு. (௩௩)

புறம்புசூழ்ந் திடுமண்டத்தும் புதியபல் சுகந்தம்வீசுந்
திறம்புரிந் துரியகாலச் செய்தியா னன்றியென்று
மறம்புரி வாரினூரா மம்பல னளிக்குமந்தப்
பறம்புசூழ் நெறிவிளங்கா பண்ணவர் தமக்குமன்னே. (௩௪)

பத்தியி னடிசூழ்வானோர் பார்த்திழி யருவியோட்ட
மத்தலை நின்றதென்னென் றதிசய முறவவ்வெள்ளிக்
குத்திரம் வேள்விவீதி கோத்திரத் துருகியோடி
மெத்திய வெப்பமாற வீழுத லொழியுமாங்கே. (௩௫)

கோததிர மதிற்சுவேத குஞ்சா மமுதவாவி
சேத்திர ளமருங்காம தேனுவெண் மாடமாதி
காத்திர விடயமாய பரிசத்தாற் காண்பதல்லா
னேத்திர விடயமாகப் பிரித்துணோர் காணொணாதால் (௩௬)

முனிவர்பூ வெடுப்பவெட்டா விடயத்தை முரண்மால்யானை
யினிதுகை நீட்டித்தாழ்த்தாங் கெடுத்தபின் விடுத்துச்செந்தே
னனிமழை மலர்பூமாரி நல்குமா வர்த்தமிக்க
புனித சங்காரித்தங்கள் பொழுதொன்றிற் பொழிதல்போல. (௩௭)

மாதவ ருடசந்தோறும் வாலதிச் சாங்கந்தானே
சோதனி யுபாங்கமாகச் சூழ்ந்துவை கறைமுற்காலத்

தாதர முறைப்பகாளு மலகிடும் பணிமேற்கொள்வ
பூதர மதனில்யாண்டும் புல்லின மளப்பிலாத. (௩அ)

அலகிடு மிடங்கடோறு மலகிலா நிரந்தமங்கண்
வலனுறு காமதேனு மபசல மதனுனீவப்
பலமுசச் சிலபூந்தாதிற் பண்ணிறஈ கோலஞ்செய்வ
குலசரி யருவிமொண்டு குழுமிநன் முன்றில்வார்ப்ப (௩௯)

கேசரி யருவியாடிக் கெழுவுதஞ் செயலொடங்கு
மாசரி முனிவர்பின்னல் வள்ளுகி ருவார்ந்துலர்த்தற்
காசரி தங்கணீட்டி யத்தொழில் புரிவவேர்க
டேசரி வெயிலுணக்கு மருத்துவர் சிவணமாதோ. (௪௦)

களிர்சுவைத யேல்லைகீர நாலேயே புரையுமேனு
மொளிதிக மூவரியேய்க்கு முற்பலத் தெழுமென்றாதி
னளிகள்செவ வழிசெய்செம்மை யம்புய மலரினோர்காற்
களிமதுக் கடலேநேருவ கவினுமக் கைலேப்பாங்கர். (௪௧)

அமரிபூ ரிதவலந்தை யளப்பில கீரவேலே
விமலன்பின் ஞளிலியார்க்கு மளித்திட விழையிற்செய்த்தா
யமருமம் வரவுதாழ்க்கு மண்மிப்பல் லுருவமாக
வெணமையளித தருளயாழ்து மென்றவ ணிருத்தலேய்க்கும். (௪௨)

மாடுபலம் நடத்தவாளே வாவிவான் கிழித்துக்கற்பஞ்
சாடிமா டங்கடாக்கிச் சலமலர் மணிபொன் வீழ்த்தல்
வாழியா வர்த்தமேசம் வர்த்தசங காரித்தங்கள்
பீடுறு புட்கலாவர்த் தம்மழை பெய்வமானும். (௪௩)

வேறு.

பூதிநிறை மெய்யர்விழிப் புனல்பெருக விருந்தசையா
தோதியர்நோற் கின்றார்க்கண் டுறுபகலின் மதிச்சிலேதான்
சீதனீர் பொழிதலென்கொல் செப்புகெனச் சிலம்பிதன்மெய்ச்
சோதியினென் றிறைதருவார் துணிபுணரா வாதிகள்போல். (௪௪)

வேறு.

சரியையே முதல்மூன்றுந் தனித்தனி புவியிற்றுங்கி
யரியசாற் சாலோகாதி பதந்தொறு மமர்ந்துவாழும்
பெரியர்முன் னெறியின்மேன்மேற் பிறங்குநன் னெறியின்மேவி
புரியநூன் மரபினின்றுங் குவலையிற் பொலிந்துவாழ்வார். (௪௫)

மறைபாரா யணர்களோர்பால் வாக்கியம் வகுப்பரோர்பா
னிறைபொருள் விரிப்பரோர்பா னேதிகீத் தொழிப்பரோர்பா

லறைநெ றருள் சிவனேயென் றுவளவையா னிறப்பரோர்பாற்
பொறையரு ளடக்கம்வாய்மைப் புனிதமா தவர்கள்பல்லோர். (௪௬)

ஆகம மிருபானெட்டு மையமுன் னுபமுன்றும்
போகமுற் றுணர்ந்துதம்பாற் போந்தவர் பாசசத்தி
யேதுறப் பசுத்துவதனை யிரித்தருட் சிவமேதாமே
யாகவைத் தருளும்போத வாசிரியர் படங்கள்பல்ல. (௪௭)

வேறு.

மூற்றுணர் பரமன் ருத்திர வடிவின் மொழிந்து வேதத்தை யாகமத்தைத்
தெற்றென வுணரும் பாடிய வடிவிற் செய்துற வுயிர்களா மேனோர் [தா
சொற்றநூல் களினம் மறைத்துணி பாய்ந்து துளங்கலெ னவன்செ யாகமத்
திற்றெனத் தேர்ந்து தெளிகவென் றுரைப்ப ரிவைமுடி வொன்றென வு
[ணர்ந்தோர்.

வேறு.

இத்த குங்கை லேப்புறத் தின்னுமெண் ணிலவா
மெய்த் தகுந்திரு வளனெலாம் விளம்புவா ரெவரே
யத்தனிப் பொருப் பளவதிற் சிருங்கங்க ளவற்றின்
மத்தியிற் றிருக் கோயிலின் வளஞ்சிறி தறைவாம். (௪௯)

ஒது தன்னகத் தமர்ந்தரு ளிறையென வொழியா
வேத னண்டமுட் புறம்பெலாம் விரிந்தநா தியதாய்க்
கோதி லாதபல் வனைச்சிலை யுலோகங்கள் கொடிகண்
மீது பின்னு*குஞ் சம்பல விளங்குவதாகி (௫௦)

நீடு வெள்ளொளி யாங்கணு நிறைக்குமக் கைலை
நாடு மேலவர் காட்சிக்கு விடயமாய் நாற்பான்
கோடி யோசனை யுந்நதங் குலவதிற் பாதி
யாடு யோசனை யகற்சிபெற் றுடையதப் பொருப்பில் (௫௧)

பாங்க ராயிர கோடிமா சிருங்கங்கள் பரம்பி
யோங்க நாப்பணிற்† கருணிகா காரமாயுவம
னீங்கி யையிரு கோடியோ சனைவரை நிமிர்ச்சி
தாங்கி யத்துணை யகன்றொரு சிருங்கமன் றயங்கும். (௫௨)

ஆய தோர்சிக ரத்தின தடிசலாய் முடிகண்
மேய வான்சிக ரம்பல வவற்றடி மேவிப்

---

* குஞ்சம்-லதாக்கிருகம். அது ஈண்டு முனிவர் வாசஸ்தானம்.

† கருணிகை-தாமரைப்பொகுட்டு.

பாய சேண்முடி சூழுறப் படர்வன வனேகஞ்
சேய வாங்கவற் றடிமுடி செறிவன வனேகம். (௩௩)

அன்ன வற்றடி சூழ்வன வவற்றடி சூழ்வ
வென்ன விவ்வகை போரொர்சூழ் நிரைமுடி யெவையும்
பன்னு மேன்முடி யளவினிற் பதின்மடங் கதிகந்
துன்னி நின்றகீழ்க் கீழ்விரி தொகையின வாகி. (௩௪)

சிகரம் யாவையுங் கணிதநூற் றேர்ச்சியிற் சிறந்தோர்
புகலுமா பெருந் தொகையினு மடங்கிடா புள்ளூர்
தகைய வானவ ரிருவரித் தொகையெனத் தாங்கள்
பகர வெண்ணின்மால் பிரமன்பேர்ப் பொருந்திற பரிப்பார். (௩௫)

அலகில் கோடிமா சிகரங்க ளென்னவே யமைந்து
நிலவு மாங்கவை யெவ்வொரு சூழ்நிரை யினதொத்
திலகு மாடக மிரசித மிந்திரன் சிலைகள்
குலவு நீண்மணி மரகதங் கொழுங்கதிர் வயிரம். (௩௬)

படிக மாதிய வடிவமாய்ப் பகிரண்டத் திருளுங்
கடியு மின்னவை யாவினு முயர்ந்துமுன் கழறு
முடியி னின்றதோர் முடித்திறன் யாவரே மொழிவார்
வடிவி னலது மாணிக்க மயத்ததாய் வயங்கும். (௩௭)

இந்த மாமுடி மேலதா யிலங்குறப் பெவர்க்குஞ்
சிந்தை யாலுநின் றளப்பரி தாய்நெடுஞ் சேண்போ
யுந்து காஞ்சன மாமதி லொளிர்மணிக் கொடுங்கைப்
பந்தி யோடுமச் சிகரத்திற் சூழ்ந்தொளி பரப்பும். (௩௮)

இருங்கவின் கொளு மன்னுத னுச்சியி னிலங்கி
விரிந்த கோடியோ சனைத்துணை வியனிடத் தாகி
வரங்கொள் கோடிமா மேருவின் வயங்குகோ புரநீள்
‡பிருந்த மோடுறு வாயில்கள் பிறங்குவ தாகி. (௩௯)

அணி யுறுத்திய பஞ்சரத் தினங்களா லமைந்த
திணிய வாவர ணங்களோங் கிலங்குறு சீர்த்தாய்
மணிகொ ளேமகல் லாரமல் கேமவான் றடங்க
ளிணையி லேமவுய் யானமுன் னிலங்குவ தாகி. (௪௦)

கருது தாங்கடார் தனித்தனி வாழ்பதங் களினு
மிரமடங் குயர் வளத்தவா யிமாசலே யெழிற்குஞ்

‡ பிருந்தம்-கூட்டம்.

சாரூபன் குகன் மாலய னாதிமுனோர் சதந
மருவி வாழ்வுறு பதங்கண்மன் வயங்குவ தாகி. (சுக)

கோல மேருவை யொத்தவர் குடிலமா முடியோர்
சூல டங்கதண் டங்கரம் பரித்தவர் துலங்கு
நீல கண்டத்தர் கராளதந் தத்தினர் நிலவும்
பால நேத்திர ராலயாய் நாகலா பரணர். (சுஉ)

வேறு.

ஆயபல் பூதநாத ரளவிலர் சூழ்வதாகி
மேயமா வலங்காரங்க ளொளேத்துமார்ந் துலகமெல்லாம்
வாயவற் புதங்கொண்மேனி யுருத்திர கணிகைமாதர்
மேயபல் குழாங்கள்சூழும் விளங்கமிக் குடையதாகி. (சுங)

ஆன்றவ ரகத்துளென்று மமர்ந்துவீற் றிருப்பதாகிச்
சான்றவர் துதிசாரூபந் தாங்குருத் திரர்பல்கோடி
தோன்றல்கள் சூழ்வதாகிச் சொல்லினும் விரைவினெங்கு
மேன்றுசெல் விமானகோடி யெங்கணுஞ் செறிவதாகி. (சுச)

கிளருமிந் திரமாநீல ○கிருதமேசா பானத்தாலுந்
தெளியொளி மணிகளாற்செத் திரித்த‖குட் டிமங்களாலுந்
தளர்வில்பல் வயிரத்தம்பந் §தத்தகாஞ் சனத்தபித்தி
யொளிசெயு மிந்துகாந்தத் துலப்பில விடங்கத்தாலும். (சுரு)

சவிதிகழ் பதுமராகச் சாளர வரிசையாலு
மிவைமுத லளவிலாம விலங்குறுப் பினங்களாலுந்
தவலறத் திகழ்வதாகித் தாளமத் தளங்களாதி
திவியமா வியம்பநிக்கும் பல்கணஞ் செறிவதாகி. (சுசா)

வரையறு மணிவித்தார மண்டபஞ் செறிவதாகி
யுரைசெய்தம் மதிகாரங்க ளொழிந்தவ ரளவிலாத
வரிபிர மேந்திராதி யமரர்சா யுச்சியத்திற்
புரிவொடு சண்டசாமீ பம்முறீஇப் பொலிவதாகி. (சுஎ)

தங்தொழி னிகழ்ச்சியாவுஞ் சாற்றிய வாங்குச்சார்ந்த
விந்திர னயன்மாலாதி யிமையவர் முனிவரேனோர்

---

○ கிருதம்-செய்யப்பட்டது.

‖ குட்டிமம்-கற்பதித்தநிலம்.

§ தத்தம்-தப்தமென்னும்வடமொழி தற்பவமாய்ப் புடம்வைக்கப்பட்ட வென்னும் பொருடந்தது.

வந்துசா மீபத்தெய்தி யுட்புக வணங்கியேத்து
நந்திமண் டபமுன்மேவி நலம்பெறத் திகழ்வதாகி. (௬௮)

ஆயிர கோடிசோம ரருக்கரோ டங்கியொன்றாய்
மேயின வென்னையாண்டும் விமலதே சுடையதாகி
வாயிக மாதிமூன்றுக் ககோசர வடிவமாகிச்
சேயவென் னறிவுக்கெட்டா வளம்பல செறிவதாகி. (௬௯)

செழுந்திருச் செம்பொற்கோயி லொன்றுசேர்ந் திலங்குமாங்கே
யழுந்துறு மிடரினீங்கி யாருயிர் யாவுமின்பந்
தழுஞ்சிவத் துவப்பேறெய்தச் சகளமா யகளமாகி
யொழிந்திடா தியாண்டும்வேறற் றுறைபொரு ளொன்றுதானே. (௭௦)

திருவரு ளதனாற்பால சந்திரன் றிரைசெய் கங்கை
மருவுறு மிதழிவேணி மாணிக்க மகுடமாண்பும்
பொருவருந் தூவெண்ணீற்றுப் புண்டர நுதல்வனப்பு
மரிவில வனன்முக்கண்ணு மாரகுழை யணிந்தகாதும். (௭௧)

அருமறை யாகமங்க ளாதிமெய்ந் நூல்கணைந்தி
திரிபுரைக் குபதேசிக்குஞ் சீர்நிறை திகழ்செவ்வாயு
மரியுறு வெண்மைமாற்றிக் கருமையன் றளித்தவாலம்
விரவுறு களனுநாக பூடணம் விளங்குமார்பும். (௭௨)

ஒருதிரு முகனுநான்கு புயங்களு மொழியாதென்றும்
விரிதரு கருணைநோக்கு மேருவி னருவிமானு
முரணமர் மருமுன்னூலு முழைமழு வபயமொப்பில்
வரதவண் கரனும்யாத்த திருவரைச் சருமமாண்பும். (௭௩)

இருவினை யொப்புவாய்ந்து மலபரி பாகமேய்ந்து
திருவருள் பதியப்பெற்றுச் சிவத்துவ விளக்கமுற்று
மருவினர் மருவுகின்றார் மருவுவா ராயவெண்ணில்
பெரியவர்க் குலகநாடு பிறங்கிய நகரியாகி. (௭௪)

உறைதரு மனைகளாகி யுலாவரு வீதியாகி
நிறைமலர்த் தடங்களாகி நீண்மலர்ப் பொழில்களாகிக்
குறைவிலுய் யானமாகிக் கோதிலுப் பரிகையாகி
மறைமுழங் கரசுமேவத் தாணிமண்ட பங்களாகி (௭௫)

சித்திர மணிமன்றாகிச் செய்மணி யணிகுன்றாகி
நித்திய நிதிகளாகி நிரந்தபன் னதிகளாகி.

யத்தரு பெரியர் யாருந் தனித்தனி யமர்ந்திட் டாங்கே
சுத்தவந் துவிதா னந்தந் தோய்வுற விரிந்த வாகி. (௭௬)

வேறு.

அரவணையான் சிந்தித்தே தாவிடுவவாகியருமறையான் சென்னிதனக் கணிய வாகிச், சரவணத்தான் கைதொழுது சார்வ வாகிச் சார்ந்தார்க டமக்கெல்லாஞ் சரண மாகிப், பரவுவார் பாவங்கள் பறைப்ப வாகிப் பதினெட்டுக் கணங்களுஞ்சீர் படிப்ப வாகி, விரவுகொடு வினையார்கள் குறுகா வாகி விழைந்துறை தண்டைக்காலாக் காப்ப வாகி. (௭௭)

அரும்பித்தசெய்ஞ்ஞாயிறேய்ப்ப வாகியழுகெழுத லாகாத வருளே யாகிச், சுரும்பித்த வண்டினங்கள் சூழ்வ வாகிச் சோமனையுங் காலனையுங் காய்ந்த வாகிப், பெரும்பித்தர் சேர்ந்துபிதற் றவன வாகிப் பிழைத்தார்கள் பிழைப்பறிய வல்ல வாகி, விரும்பித்தங் கையாலன் புடையா ரிட்ட விரைமலர்க டாம் விரிந்து நிறைவ வாகி. (௭௮)

ஒருகாலந் தோன்றாதிருப்ப வாகியூழிதோ றூழியுயர் வுடைய வாகிப், பரியோடு பற்றுமுனி மைந்தற் காகப் பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்த வாகிப், பொருளாளர் பொன்னுலகையாய் நிற்ப வாகிப் புகல்விசும்பை யூடறுத்துப் பொலிவ வாகி, யருமாக மதிக்குமுண் மாண்ப வாகி, மந்திரமுந் தந்திரமுமாய வாகி. (௭௯)

உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வா வாகியுருவமெனக் குறித்துணரவொண்ணா வாகிப், மருந்துமூலம் பல்சிலம்பு மார்ப்ப வாகிப் புகழ்வார்கள் புகழ்தனைய வல்ல வாகி யுரைமாலை யெல்லாமு முடைய வாகி யுரையாலு யாதுமுணரப் படாத வாகி, யவ்வரமாத்தி ரையிலடங்கி யமர்வ வாகி யகலமனைக ளிற்பார்க ளில்லா வாகி. (௮௰)

அணியனவுஞ் சேயனவு மல்ல வாகி யடியார்கட் காரமுதப் பெருக்கே யாகிப், பணிபவர்க்குப் பாசுகாக வல்ல வாகிப் பற்றற்றார் பற்றுநின்ற பயனே யாகி, மணியனைய பொன்னனைய மாண்ப வாகி மருந்தாகிப் பிணிதீர்க்க வல்ல வாகித், திணியரக்கன் றனதாற்ற லழிப்ப வாகிச் செப்பருமற் றெப்பொருளுஞ் சேர்வ வாகி. (௮௧)

வேறு.

இன்னன பலவு மாகி யிருநிலத் துயிர்க ளெல்லா
மன்னல முற்று மேவி நயப்புறப் போந்த வாக்கின்
முன்னெனை யாண்ட தெய்வ மாகிலம் வீணை யாதிச்
சொன்னலம் பெறமுன் போற்றுந் துதிக்கிலக் கியமாய் நின்ற. (௮௨)

மலர்தரு தூய செந்தா மரையவர் மருவு வாய்மை
நலனெலா மமைந்த செய்ய நற்றுணைப் பதமுமேவி

யிலகெழி லருணன் மேனி யியைந்தெமை யாளு மண்ண
லுலகமுற் றொருங்கு வாய்த்த வுமையருட் சத்தி யோடும். (அரு)

ஆயிர கோடி ஞாயி றுங்சொருங் குதித்தா லென்னப்
பாயொளி கான்று.மீது பணிமதிக் கவிகை காப்ப
மீயுற மணிவி தானம் விரைகமழ் மென்போ தார்ந்து
மாயிருங் கண்ம டங்கன் மடங்கின மிமிர்ந்து தாங்கும். (அசு)

அரதன பீடத்தும்ப ராருயிர்க் கின்ப மேவ
விரிதரு கிரீடை செய்து வீற்றிருந் தருளு மென்று
வரமிகு மலையத் தெம்மான் வழங்கின னிமயத் தன்னை.
பரனெதிர் பணிவி ஞவும் பரிசினைப் பகர லுற்றான். (அஙி)

திருக்கைலாயச்சருக்கம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-சஅஙி.



## கௌரிதாண்டவச்சருக்கம்.

எம்மையா ளுடைய கோன்வீற் றிருந்தருள் கைலை மேன்மை
பொய்மை தீர் தவத்தீர் முற்றும் புகல்வதெற் கியலு மோமே
லம்மையண் ணலைவி னுவி நவபுரி யடைந்து நோற்கச்
செம்மையஞ் சடிலத்தெம்மான் செய்நடச் சிறப்புச் சொல்வாம். (க)

அத்திருக் கைலை தன்னி லண்ணறன் னிடப்பான் மேவுஞ்
சத்தியெம் மன்னை யோர்காற் றனித்தெழுந் திறைஞ்சி நின்று
புத்திமுத் திகளை யன்பாற் போற்றிவேண் டுநர் தமக்கு
வித்திய முதவ ருனே நியமங்கொ ணிமல மூர்த்தி. (உ)

அனக வேலான் வேதன் றன்னகம் வீட்டு மேலோய்
மன்னக வரசா மங்கைச் சொன்னகங் கணம்ப ரித்தோய்
பன்னக மதிகொள் வேணி யின்னக மிதழி வேய்ந்தோ
யென்னக மெனவே யீந்த மன்னகத் திருந்து வாழ்வோய். (ங.)

ஆரண முதல்வ போற்றி காரணற் கரியாய் போற்றி
வாரண முரித்தாய் போற்றி மாரண சூலி போற்றி

§ பணிவிஞவு:-பணிந்துவிஞவும். வரிப்புனைந்து என்பதுபோல.

பாரண கான போற்றி காரண பரம போற்றி
பூரண புனித போற்றி தாரண புயங்க போற்றி. (௪)

என்னை நின் றேத்தி யன்னை யிறைவநின் னடனம் பல்வே
றுன்னுறு மியல வென்று யுவற்றிய லிடநதேர் கில்லேன்
பொன்னணி பன் மன்றி முன்னீ புரிநடம் புரிந்து நோக்கி
நின்னரு ளொருவு றாது நினைறுள முவகை கூர்ந்தேன். (௫)

கமலத்தி னறுந்தேன் மாந்திக் கடிமலர் பின்னுந் தேடும்
பமரத்தி னின்ன டத்தின் பாலுள்ளம் விரும்பு மேலுஞ்
சமலத்தாக் கறிவொ ணாதோய் தாண்டவ பேத மின்ன
நிமலநந்த தலைக ளின்ன வென்றிவை நிகழ்த்துகென்றாள். (௬)

கிளந்தசொல் வினவி யெம்மான் கிரிசைகே ளுலகம் யாவும்
வளந்தரு நமது கூத்தின் வயமென வுணர்தி யாணி
லுளந்தவ மகிழ யாமு மொப்பிலா நடனந் தில்லைக்
களந்தனிற் புரிகாற் சாம கானநீ யாங்குச் செய்தாய் (௭)

வேறு.

தயங்கிய சாம கானத்தி னின்றுஞ் சரிகம பதநியேழ் சுரங்கள்
வயங்குறு சட்ச ரிடபகாந் தாரமத்திம பஞ்சம மதன்மே
லியங்குறுதை வதமே நிடாதமென் பெயர்க ளியைந்துமா யூரமே யிடப
மயங்கிர வுஞ்சங் கோகிலந் துரக† மாம்பல வோசைபோன் முறையே. (௮)

மூன்றன்பி னொன்று யொலித்தெழுந் தனவா லோதுமவ் வேழ்சுரங் களினு
னன்றுநம் மிடையே யெழுவித நடன நலம்பெறத் தோன்றின நளிர்பூ
மன்றலங் குழலா யுலகுயி ரோர்ந்து வழிபடூஇ யின்புற மதித்தே
யினிறுநீ கேட்டி யிவற்றெழு பெயரு மடங்கலு மிசைத்துமென் றியம்பும்.

மாதவர் பரவு மானந்த நடனம் வயங்குறு சந்தியா நடனங்
காதலி நின்பேர்க் கௌரிதாண் டவமே கவின்பெறு திரிபுர நடன
மோதுமா காளி தாண்டவ முனிதாண் டவமொடு முலகசங் கார
மேதகு நடன மெனுமிவை யெழுநாம் விதநதன் னுமமென றுணர்தி. ( )

வேறு.

பிரமகற் பங்க டோறும் பேணுநர் பொருட்டா லிந்தத்
திருநட மேழுஞ் செய்துஞ் செப்புமத் தூனங் கேண்மோ
வரவுமம் புலியும் போற்று மருட்டிலலை யம்ப லத்திற்
பரவுமா னந்த தாண்டவஞ் செய்வோம் பைம்பொற் பாவாய். (௧௧)

† ஆம்பல-ஆறனுருபு விரிந்த யானையின் றிரிசொல்.

இவர்மணி மாடக் கூடல் விரசித சபையி னின்று
தவாடி பரவச் செய்தாஞ் சந்தியா தாண்ட வஞ்செம்
பவளமெல் லிதழி யின்பேர்ப் பரவுதாண்ட வத்தையென் றுஞ்
சிவமிகு திருத் தலத்திற் சிற்சபை யதனிற் செய்வோம். (௧௨)

‡அத்திரி கூட வெற்பென் றறைதிருக் குற்றா லத்திற்
சித்திர சபையிற் செய்வோந் திரிபுர தாண்ட வம்பூங்
கத்திகைக் குழலி யாலங் காட்டினிற் காளிதாண்ட
வத்தைகண் டியற்று கிற்போ ரத்தின சபையின் மாதோ. (௧௩)

தாம்பிர சபையிற் றேவ தாருமா வனநெல் வேலி
யாம்பிர பலதலத்தில் லாற்றுது முனி நிருத்தங்
காம்பிரங் குறுதோ ளீசங் காரதாண் டவநமை யாவுங்
கம்பிர வதனி னின்று குலவுற வியற்று கிற்போம். (௧௪)

இவ்விய னடன மேழு மோங்கிழா வியற்றி டங்கள்
செவ்விதி னுரைத்தா முனறன் சிந்தையி லார்வ மிக்க
தெய்விய னடன மோது கென்னவென் போர்க டங்கா
ணவ்விழை வுற்றே னன்ன தலமெவ னருள்க வென்றான். (௧௫)

அன்னையாங் குரைப்ப வெங்கை யருள்செயு மமலனாமுன்
மன்னடம் புரியு மால வாய்மது ராபு ரிக்கு
முன்னூறு வடகீழ் பாலின் மூன்றரை யோசனைத்தாய்ப்
பன்னுமெல் லையிலுண் டோர்பொற் பதயந் திதிக ரணம். (௧௬)

அயவனஞ் சகல தேவ சேவித மாகு மாங்கே
திவ்விய சமது ருப சிவக்குறி யஞ்சோதி யாகி
மெய்யமெய்ய வுபதேவக விலங்குமொன் றதிலெஞ் ஞான்று
மைவிழி யுமைய மாமை மன்னிவீற் றிருந்து வாழ்வோய. (௧௭)

என்றிவை யருளி னேந்தி யெம்பிரா னியம்பு மேனு
னெறிசெய் பிரணவார்த்த நாமென வுணர்த்தி நம்பா
னின்றொளிர் கொன்றை யிற்போ னிலங்களிற் றலங்க டம்மின்
வெற்றிகொ ளித்த லத்தினமக்குள விருப்பு மேலாம். (௧௮)

மதிநுதற் பவளச்செவ்வாய் மதாரிக் கயற்கட் கோங்கின்
கதிர்மணி யாரக்கொங்கைக் கனங்குழைக் கௌரி கேட்டி
விதியரி புடவி நாகர் விபுதர்கள் பிறரு முன்னோர்
கதியளி முரலக் காளிற் சூழ்ந்தலை யருச்சிப் பாரால். (௧௯)

---

‡ அ-சட்டு.

சகலகா மியங்க ளுக்குந் தவமொன்றே யேது வாகும்.
வகையுயிர்ப் பயிர்க ளோம்ப வருசரி யாதிக் காலிற்
றகையரு ணன்னீர் பாய்ச்சத் தலைவிளை யாங்கட் பூசை
பகர்தவம் புரிதிநின் பேர்ப் பயனடந் தெரித்து மென்றான். (௨௦)

அத்தனன் மொழிசெவி ளுவி யன்னையுள் ளுவகை கூர்ந்தந்
நித்தனை தருளின் மேன்மை நினைந்தவ னடியிற் றாழ்ந்து
பத்தியி னிறைஞ்சி நீங்கா விடைபெறீஇப் பரவு மக்கா
னத்துற மதித்தெ ழுந்தா ளகிலமு நலம்பெற் றுய்வான். (௨௧)

பொன்னரி மாலை யாதி புதுமலர்த் தொடைய லாதி
நன்னரி னணிந்து சாம்பூ நதத்§தடர் குயின்ற தண்டிற்
றுன்னரி வயிரத் தாற்றித துலங்கநித் திலமேல் வேய்ந்த
பன்னரி தாய சோதிப் பஃறொழில் விமான மாங்கே. (௨௨)

அமரரிற் சில்லோர் தாங்கி† யந்திகங் கொணருமுன் னிற்க
வெமையளித் தருளு மன்னை யிறைவனை யகத்திற் றாங்கி
பமரமெல் லோதி யார்ப்பப் பாதநூ புரங்க ளார்ப்ப
விமைகதிர்க் கலாப மார்ப்ப வியம்பதி னெட்டு மார்ப்ப. (௨௩)

மாதவர் முனிவர் போற்ற மற்றவர் மகளிர் வாழ்த்த
வேதமில் விபுதர் யாரும் புட்கலா வர்த்த மேய்ப்பப்
போதரப் பொற்பூ மாரி பொழிதரப் புவனம் வாழக்
காதலின தன்க ணேரா கணித்துவீற் றிருந்தாண் மன்றோ. (௨௪)

வானிம கரன்பாற்பானு மண்டலத் திறைவன் போலத்
தூனமர்ந் தருள ரூனி தரிசனத் துணர்த்து வாள்போன்
மேனநித் திலவி மானம் வீற்றிருந் தருளு மன்னை
தேனல ரல்ங்கல் வானோர் காவினர் செலச்செல் வாளால். (௨௫)

அன்னையாங் கெழுநுன் முன்ன ரநிந்திதை கமலினிப்பேர்
மின்னனார் முதல னேக சேடியர் விரவிச் சூழ்ந்தார்
சின்னமெக் காளந் தாளந் திமிலைசல் லரிதடாரி
யின்னிய முள்ள வெல்லா மியக்கினர் கணங்க ளெல்லாம். (௨௬)

பன்னிறக் கவிகை தாங்கிப் படர்குநர் பல்லோ ரம்பொற்
றன்னுகாற் கவரி வீசிச் சூழ்குநர் பல்லோ ரங்கை
மன்னுகோ டிகங்க டாங்கி வருகுநர் பல்லோர் தண்கான்
முன்னுறு சிவிறி வீசி முடுகுநர் பல்லோர் சூழ்ந்தார். (௨௭)

---

§ அடர்-தகடு. † அந்திகம்-சமீபம்.

துங்கால் விஸைகள் பாடுஞ் சூதர்மா கதர்கள் பல்லோர்
மங்கல மெடுத்துப் பாடும் வந்தியர் பல்லோர் போர்தார
வங்கிய முதல கோட வகிமுதற் கருவி யேந்தி
யங்கிசை யெழாலி னின்ப வமுதம்பெய் தனேகர் சூழ்ந்தார். (உஅ)

மேயநான் மறைகள் வீற்று வீற்று நின்றி சைப்பார் பல்லோர்
தூயவம் மறைக ளாலே சுவத்தியோ தூநர்கள் பல்லோர்
சேயதந் திரங்க ளோதுஞ் செம்பொரு டிரட்டி நேர்நின்
றூயபன் னுதிக ளாங்கே யன்பொடு பகர்வார் பல்லோர். (உகூ)

புயனிறக் கோகி லங்க போதக மராளம் பூவை
பயின்மொழிப் பலாச னங்க ளாதிய பறவை தத்த
மியல்பின் வாழ் பஞ்ச ரங்க ளேந்தியவ் விசையி சைப்பித்
தயில்விழி யரம்பை மாத ரளப்பில ரெடுத்துச் சூழ்ந்தார். (௩௦)

திரிமருப் பரிண மோவாத் திறல்கெழு மேட மிக்க
கருமுசு வாதி தத்தங் கைக்கொள் பொற் றொடரி னோடு
மருவுறக் கொண்டு செல்லும் வானவ ரன்ன மாகக
டருதொழி லருமை காட்டிச் சார்ந்தன ராங்கட் பல்லோர். (௩க)

வீரமே யுருக்கொண் டன்ன விசையையே சயையங் கையிற்
சேரமா விடப மீது திகழ்தரு பொற்கோ றாங்கி
நேரிரு பாலுஞ் சூழு நெருக்கினை யொதுக்கிச் செல்லத்
தாரணி முழுது முய்வரன் றண்ணரு ளேக்கச் சென்றாள். (௩உ)

இத்தகை யோடு செல்லு மெம்பெரு மாட்டி யாங்குச்
சித்தமீ தன்பு கூரச் சிறடி பணிந்து போற்று
நித்திய முனிவர் வானோர் நிற்குநர் நிறீஇப்பல் வாயி
லத்தலை யொருவிக் காத மளப்பில கடந்து சென்றாள். (௩௩)

வேறு.

என்னகத்தென் னிருந்தவத்தா லினிதமர்ந்தா ளிறைமணஞ்செய் தெழுந்த காலைத், தன்னகத்துச் சார்ந்தருளுந் தனையைபினுந் தாயகஞ்சார் தைய லார்போன், மன்னகத்து வகையோடும் வந்தனளென் மகிழ்வெள்ள மனங் கொள் ளாமற், றன்னகத்திற் சொரிதலெனத் தூயருவி துலங்கிமயத் தோ ன்றக் கண்டாள். (௩௪)

எனையகன்ற பிரிவாற்றா னென்றுரைகை விளர்த்துடல மின்னல் கூர்ந்தான் றனையணுகி மாற்றுதுமென் றருள்கூர்ந்து வருமவள்போற் சமீபத் தெய்தித் தனையவன்கண் டகமகிழ்ந்தாங் கந்நிறம்போய்த் தன்னிறமே பரவச் சார்ந்தா னினைவரிய சுயம்பிரகா சத்தெவையுந் தன்மயமா கிகழ்த்தும் பூவை.

ஆங்ககன்று தேவர்தினத் தொருபாதி யமரர்நரர்ங்கட் பாதி
பாங்குபெறப் பூசனைசெய் கேதாரம் பணிந்தேத்திப் பவள வேணி
தாங்கியமா நதிசுலவ வீற்றிருக்கு மகிலேசன் றன்னைப் போற்றித்
தேங்குபுகழ்ச் சீசைலம் பணிந்துகா ளத்திமலை சென்று சேர்ந்தன். (௩௯)

காளத்தி மலைக்கொழுந்தைக் கற்பகத்தை யற்பகத்திற் கனிந்துட்கொள்வோர்
நீளத்தம் பவத்துழலும் பிணிக்கெழுந்த வருமருந்தை நேர்கண் டேத்தி
மீளத்தன் றனக்குவடு தனக்குவடு விளைத்திடவுள் விழைந்தோன் கண்ட
காளத்தன் றனையிறைஞ்சிக் கம்பமகன் றம்மையுளங் களிப்பச் சென்றான்.

இன்னனபல் லிடங்களெலா மியனெறிக்கண் டினிதேத்தி யிம்ப ரீன்ற
வன்னைதிருத் தொண்டைநா டகன்றடியர் தொகைக்குவிரி வகிலம்போற்றப்
பொன்னவையி னுலகெலா மென்னுமுதல் கொண்டியற்றும் புனிதர் பல்
காற், பன்னுறுசீ ரனபாயன் மரபினர்தந் நீர்நாட்டின் பாங்கு சேர்ந்தான்.

அந்நாட்டிற் காருயிரா யமலமதா யருண்மயமா யண்டமெங்கும்
வின்னாட்டி மறைதகர வித்தைதகு மிடமிதென விதந்த சீர்த்தாய்ப்
பண்ணாட்டிற் குரியபவித் திரமாம்பொன் னம்பலத்திற் பரமன் மேவி
முன்னாட்டின் புலியரவுக் கியற்றநடங் கண்டிறைஞ்சி முதமீக் கூர்ந்தான்

அப்பதியி னெகியிளஞ் சேய்மணத்தி லெவ்வெவர்க்கு மமல மோக்க
மப்பதிய வருள்பதியு மம்மகலைக் கருண்முலைப்பால வள்ளத் தீந்த
வொப்பதிக மில்பதியும் வயித்தியனா மண்மருந்தீந் துயிர்க ளேயின்
வெப்பநிறுத் துடல்வளர்ப்பச் சேயாக புரிபதியும் விழைந்து போற்றி. ( )

சாயன்மயி லுருக்கொடுமுன் றான்போற்று பதியும்பல் தலங்கள் பாங்க
ராயதனி யினமாக வங்கணிடை யமர்பதியு மாரூர் கும்பத்
தேயவிருந் திருப்பதியு மாலூரமு மால்புரமு மிகந்து மேலாந்
தூயபதி யிதுவேயென் றிறைவருமூ லப்பதியுந் தொழுது போற்றி. (௪௧)

படர்வேணிப் பரித்தகன்றிப் பதமுதனீர் பரித்தனன்சொல் பரமனென்னு
தொடர்பாக நீறுறுந் தொல்பதியுந் தாயெனவோர் தொடிக்கை மாதி
னடர்சூத வினைபுரிந்த வரன்பதியு மற்றுமடைந் தாங்காங் கேத்திச்
சுடர்வேற்கை வழுதிதிரு நாட்டிமய மலையுயிர்த்த தோகை போந்தாள்.

பத்தனமெய் வெவற்றினுமின் பத்தனஞ்சார் வளங்களெலாம் பல்குஞ்சீர்த்தா
நத்தனய னுணர்வருமர் நிலைமையொரீஇ நத்தனமென் னடைப்புன் மூர
முத்தனமென் முகாம்புயத்தான் முத்தனத்தான் முத்தனத்தமுளரித்தோன்
‡யத்தனக வருண்மேனி யத்தனகம் மதிவேணி யண்ணன் முன்னோன்.

---

† அத்து—செந்நிறம். * ஆதம்—விருப்பம்.

வளர்கைலை மலைதணந்து வந்ததனை மணந்தருளும் வகைமூ வாண்டி
னிளமகவாய்ச் செழியர்குல மீடேற வுலகமெலா மின்ப மேற
வரியொடுதான் முடிகவித்தாங் கரசபுரிந் தருள்பதியை யடைந்து நாதன்
குளிர்மலர்ச்சே வடிபணிந்து குலவுமிமா சலையுமைகை கூர்ந்து போந்தாள்.

சேவணத்தன் சேவணத்தன் றிருவடிபார் திளைப்பதிலங் கிளைப்பச் சென்ற
மாவணத்தன் மாவணத்தன் சமழ்ப்பமறை யவரவைமுன் வந்து நீட்டு
மாவணத்த னவணத்த னிச்சொலர சோதுமொழி லண்ட மேவும் [தாள்
பூவணத்தன் பூவணத்தன் பொன்னடிபோய்ப் புரிந்திறைஞ்சிப் புறம்புபோந்

சே-வண்ணத்தன்-சேவில்அண் அத்தன் திளைப்ப-வந்து என்றியையும். சென்றமிருகத்தன்மையன். மா வண்ணத்தன்.

வேறு

ஒருவாத நகவேட முடியோது பதியாய வுமைநாதனைக்
கருவாத நகடோர முயிரோகி யொழிவானுள் கரைவாசக
மரு*வாத நகவோது பெருமான்மு னவதார வளமேவிய
திருவாத நகர்நாத னடிபேணி முதமோடு சிவையேகினள். (௪௬)

வேறு

இத்தக வுடனிந் நாட்டி னிற்சில புரிகள் வேட்கை
யுபக்கிட முழுது மேத்தி யுத்தம னுரைசெ யாற்றிற்
புத்தல ரிதழி பூத்த பொற்புறு விபின மாட்டி
னுத்தமி யணிக ணோக்கி யுற்றன ளடியர் போற்ற. (௪௭)

அண்ணிய வமலை கேட்டங் கலர்க்குழன் முகிலின் கூட்டம்
வண்ணமாய்க் கோப வீட்ட மணிநகைத் தளவி னீட்ட
கண்ணுறக் கண்டு தோகை நடிக்கநன் னிமித்த காமிங்
கெண்ணிய கருமம் வாய்த்தற் கெனவிரைந் தேகி னாளால். (௪௮)

அரிச்§சுர லளியின் றாரி யணியமர் கணியி ரூல்க
டெரிக்குநற் பரம தாளம் யாள்முழ வாகத்தீப
விருக்கமோர் கானின் றாடல் விழைந்தபிற் கண்ணு ளாகச்
சரிக்கையெம் மன்னை நோக்கிச் சாற்றரு முவகை கூர்ந்தாள். (௪௯)

வனமகள் கிள்ளை மாலை மகரிகை பணித்தா ழுந்தீங்
கனிகள்பன் மணிப்பொற் பூர கடகிரை முதல தாங்கி
நனிமுக மலர்ந்து பூத்தூய் நாண்மல ரடியிற் சென்னி
குனிதர வணங்கி யேற்ப வுவகையுட் கொண்டு சென்றாள். (௫௦)

---

§ குரல், தாரி, கணியிரூல்கள்—எதிர்நிரனிறையாய், தாளம் யாழோசை, முழவங்களைக்குறிப்பித்தன் கணி—வேங்கைமரம் தாரி—இலைச அரி—தவளை கணி பிரமனைக் குறிக்கும்.

அருளிலா வுலோபர் செல்வ மவரனு பவக்கு மாகா
மருளுமா பிறரால் கொள்ளப் படுமெனல் வயக்கி யாங்குக்
கருமுசு வொன்றி றுத்த கைத்தளிர் வளர்கொண் டிக்கள்
வெருளிய வடித்தி ரூல்கள் பிழிந்திடு விதநேர் கண்டாள். (௫௧)

பிழிமதுக் கடக்கொள் பூக மடலுறப் பெருக்கு மந்தி
தழுவுபல் குருளைக் கீத ரூன்புரி யறத்து ளொன்றாய்க்
கழியிவ றன்மை யோரைக் கடிந்தவர் பொருள றத்தின்
வழிபுகுத் துய்வு காட்டு மாண்பினர் செயலாய்க் கண்டாள் (௫௨)

ஊடிய பிணைவி னுள்ள முவப்பவா சினியின் றேற
லோடிய கனிகீண் டங்கை யொழுகிய விரத முன்னின்
றீடில்பொற் சுளைகண் மந்தி யீந்திறைஞ் சிடலை யானரோர்
நீடுகைச் சொன்ன தானஞ் செய்பவர் நிலையிற் கண்டாள். (௫௩)

உழைவயா கலிவு நோக்கி யுழுவையுள் ளுருகி முன்போய்
விழைமருத் துவஞ்செய் தீனும் வெண்மறி நாளத் தோடு
தழுவிநாத் தைவந் தாசு தவிர்த்தமு தருத்து மேன்மை
யிழைநுசுப் பிமயப் பாவை யினிதுள முவப்பக் கண்டாள் (௫௪)

குளிர்கொலும் விடம்பெ றக்கா கோதரக் குருளை பானு
விளவெயி லிடைசின் றூட வின்னலுற் றனவென் றெண்ணிக்
களிமயில் சிறைக விப்பக் கலுழஞ் ஞெழுக்கு பாலார்
களிர்கமு கிதழுகொ ளார்ந்து நயந்துட னூட்டல் கண்டாள் (௫௫)

வேறு

இவ்வ கைப்பல மாக்களங் கேயபுள்
செய்வ கைப்பல செய்கையு மேனைய
தெய்வி கத்த சிறப்பு மடைந்துளோ
ரெவ்வ நீக்குமை கண்டுகண் டேகுவாள் (௫௬)

அம்பொற் கொன்றை யலரிதழ் மல்கலாற்
செம்பொற் பூமியத் தானமத் தேவியை
யிம்பர்க் கண்டமு தாயுண் டிமைப்பிலா
தும்பர்க் கொத்தன ராங்குறை யுத்தமர் (௫௭)

உருப்புத் தூர்ந்துயி ரின்புற வுள்குவான்
விருப்புத் தூண்ட வினையொடு மேகினன்
எருப்புத் தூரிற் கமுகின முத்துமிழ்
திருப்புத் தூரெனுஞ் செவ்வி வளத்தகம் . (௫௮)

ஆப கானன மேவிய வன்னைதான்
றாய மாதவஞ் செய்யத் தொடங்குமு
னேய மாதவஞ் செய்தந ரிம்முறை
வாய காவ னிறுவன் மரமென (ருக)

வேறு

உலகினுக் குணர்த்து வாளா * யும்பலான் வம்ப லாற்றிற்
செலுபுதன் சத்தி யாய சேட்டையை வாமையாதி
யிலந்தசத் திக்கோ டடுத்த தெற்றறைக் குரோசத் தெல்லை
நிலவுறு கம்பை யூரி னிறுவிநு ணிமலை பின்னர். (சo)

தெக்கணத் தனிற் குரோச மொன்றறை சென்று முன்னாண்
முக்கணன் சித்தி பெட்டு முனிவர் மகளிர்க கோதப்
புக்கண வால்சேர் பட்ட மணைகயிற் பொருவில் காளி
யிக்கண மிருக்கென் றேற்றி யிருத்தின ளாங்கன் றுனே. (சக)

செப்புமொன் றறைகுரோசத் திடைப்பிர தீசி யாசை
பொப்பில லாலங் காட்டி னுழைவிறிப் பூட்கை கெங்கைத்
துப்பிதழ்க் குதலை தீஞ்சொற் றுடியிடைக் குமாரி தன்னை
யிப்புவி யமர்த்தி யென்று வியாசலை நிறுவி னாளால். (சஉ)

வடதிசைக் குரோச மொன்றின் மெடுமறைப் பதியின் மன்னிக்
கடிசெய வாறு கோடி கன்னிமார் தமைநி றுத்தி
யிடைமல ரிதழிக் காளின் மீளவும் புதுந்தெம் மன்னை
படிதொழ விருபா லாசை யிலிங்கமும் பணியச் செல்வாள் (சங)

பூருவ திசைகுரோச மொன்றினிற் பொழில்கள் வானிற்
சேருமுச் சிற்றூ றிற்செய் தெனகரைப் பதியின் மேவிச்
சாருவ போகம வீக தந்தருள சயம்பி லிங்க
நேருமீ தியுன்பு கூர நிலமுறப் பணிந்து போற்றி (சச)

குலவிப வாசை வீதி கோத்திரங் † கவவி யூதித்
தலைபரர் ‡ பெரிசை பெண்ணுந் தண்பதி யதனின் மேவி
யலைசிகர் மிடற்றெம் பெருமா னருட்சுயம் பிலிங்கந் தன்னை
நலனிறை யன்பிற் கண்டு நயந்தடி பணிந்து போற்றி. (சரு)

யாமிய திசைக்குரோச மொன்றறை யெல்லை யேகித்
தேமல ரளிகள் கீதஞ் செய்பொழிற் கோயிற் பட்டி
யாமுதன் பதியின் மேவு மருட்சுயம் பிலிங்க மூர்த்தி
தாமரை புரைமென் றாளிற் றலையுறப் பணிந்து போற்றி, (சசு)

---

*உம்பலான் — இந்திரன் † கவ்வியூதி — இரண்டுகுரோசம்,
‡ பெரிசைசிநூர்-பெரிசையென மரீஇயது,

நிருதிதன் றிசையிற் கவ்வி யூகியி னிலவுங் கோட்டித்
திருநகர் மணிமுத் தாற்றின் றென்கரை யதனின் மாயோன்
வருமக பதிக தம்ப முனிமுனோர் வழிபட் டேத்துஞ்
சுருதிசூழ் சுயம்பி லிங்க மூர்த்தியைத் தொழுது போற்றி. (௬௭)

மேற்றிசைக் குரோச மொன்றின் விளங்குநற் காரை யூரிற்
போற்றுசீர்ச் சுயம்பு வாகப் போந்தருள் கணேச மூர்த்தி
யேற்றுசண் டேச மூர்த்தி யிருவரும் புடையின் மேவ
வீற்றிருந் தருள்சு யம்பி லிங்கத்தை விழைந்து போற்றி. (௬௮)

பச்சிமோத் தரத்தின் பாலோர் குரோசத்திற் பரவு நல்லூ
ரிச்சையி னேகி யாங்க ணிலங்கருட் சுயம்பு வாய
விச்சைமா வடிவி லிங்க மூர்த்திமுன் மேவி யன்பா
னச்சிமென் மலர்க ளேவி நலனுறப் பணிந்து போற்றி. (௬௯)

உத்தர திசைக்கு ரோச மொன்றினில் வேத வோசை
நித்தலும் பரவி யோங்கு நெடுமறைப் பதியில் யாமு
மத்தகு பிருகு நாகர் குசகேச ராதி யோரும்
பத்தியி னிறைஞ்சி யேத்துஞ் சுயம்புவைப் பணிந்து போற்றி. (௭௦)

வடகிழக் காசை யின்கட் குரோசமொன் றரையின் மாயோ
னிடாகன் றின்ப மேவற் கெண்ணியங் கிறைஞ்சி யன்பா
லடைவினிற் பூசித் தேத்து மரிபுர மதனின் மேய
படரொளிச் சுயம்பு மூர்த்தி பதமலர் பணிந்து போற்றி. (௭௧)

இன்னண மிமய மீன்ற விடிகிடை யிணைத்த கொங்கை
யன்னமென் னடைப்புன் மூர லளிமுர லலங்கற் கோதை
தன்னுமர் காத லான்றன் சயம்பிரு நான்கும் போற்றிப்
பின்னரவ் விதழி துன்னும் பெருவனம் புகச்சென் றாளால். (௭௨)

மலைமகள் வரவு நோக்கி வனமகள் மரக தத்த
நிலவுநீன் மணிகால் யாத்த பொற்றொடை நிரைவி தானங்
குலவுற வமைத்தல் போலக் குளிர்தளி ரிடைய ண்டே து
மலர்துண ரலங்கு கொன்றை யடவியி னகம்பு குந்தாள். (௭௩)

ஆங்குறு மிமயச் செல்வி யணுகியா யவனி யெங்கு
மோங்குபல் சயம்புக் கெல்லா மூலமா யுன்னி யாங்கே
பாங்கினர்க் குதவு மூல விலிங்கமப் பசிய கானிற்
றேங்கொளி விரிப்பக் கண்டா ளன்புளஞ் செலுத்தச் சென்றாள். (௭௪)

உருவெனு வருவ மென்ன வோதொணு துபய மாகித்
திருவரு ளாகி வான்சச் சிதானந்த மாகிச் சிந்தைக்

கருணிறத் தாது முற்றும் வலித்தருள் காந்த மாகி
யருமையி னேக மாகி யமர்ந்ததிங் கேன்றோ வண்ணால்- (எ௫)

என்றினி தன்பின் வாய்மை யின்னன பலமுன் னோதி
மன்றலங் கோதை பாத மரையளி நிரையிற் சூழ்ந்து
துன்றிய*நமந்து பல்காற் றுணைவனோ டலர்வா சம்போ
லொன்றுத லுருவி னுங்காண் புறத்தழீஇ யுவகை கூர்ந்தாள். (எ௬)

பண்டெறற் கணங்கள் வேண்டப் பரன்கழுக் கடையாற் கண்ட
மிண்டுறு பவமுற் றோட்டி வீடருள் சிவகங் கைப்பேர்
கொண்டமர் வாவி யன்ன குறிக்கெதிர் குணக்கிற் றோன்றக்
கண்டுசென் றினைய தீர்த்தக் கரையின்மேற் கௌரி நின்றாள். (எஎ)

நின்றரு ளமலை பாத நேருநீ இ யனந்த னோதி
வன்றிற னுகர் வீழ்ந்து வணங்கின னெழுந்து நின்று
ரன்றவ டிருநோக் கன்னோ ரடைந்திடப் பெற்று ரற்று
னன்றிசெய் வாக்கை யுற்றார் நயந்தருந் துதிகள் சொற்றார். (எஅ)

மூலகா ரணியாய்த் தோன்று முக்குண ரூபி யாகிச்
சாலவின் பருளு ஞான சத்தியா யிச்சை தானே
யேலுறு செயலி யற்று மிறைவியா யிறைவர்க் கேயுங்
கோலங்கட் கிணைய நிற்குங் கோறறொடி போற்றி யென்றார். (எ௯)

போற்றிய காற்று னுக்கொள் புயங்கர்க டம்மை யம்மை
யாற்றுநல் லருளி னோக்கி யகிகணீ ரலர்ந்தை யீதி
னேற்றதென் னெண்ண மெண்கொ னுவலுதி ரென்ன வன்னோர்
பாற்றக வுடை யனந்தன் பதம்பணிந் தினைய பண்ணும்- (அ0)

வனந்திகழ் முகிழக் கொங்கை வரிவிழி வளைக்கை வாழ்வே
கனந்திகழ் கண்டர் பாத முடிக்கொளக் கருதி நாயே
னினந்திக ழடியர் போற்றுங்†கமலையி லிறைவற் போற்றி
மனந்திகழ் தாமுன் னேற்ப மதிமுடி யெதிர்வர் தென்பால். (அக)

காண்டரு மலர்த்தி ருத்தாள் காட்டினன் களிகூர்ந் தெந்தாய்
சேண்டவழ் திங்கள் வேணிச் செல்வநின் றிருத்தாள் சென்னி
பூண்டிட விழைந்து னேனுற் புரிந்தருள் புனிதவென்றே
னேண்டரு தவநீ யின்னு மியற்றுதி யெய்து மென்றான் (அஉ)

---

* நமந்து- பெயரடியாகப்பிறந்தவினையெச்சம்.

†கமலை—திருவாரூர்

இனியெவ னோற்ப தென்ன வெந்தைவா சுகிகார்க் கோட
னினைபுநந் தாண்ட வத்தை நின்றெதிர் காண்பான் கொன்றை
வனமிசை மடுவி னோற்பார் மற்றவர் நாப்பண் மேவி
நனிதவம் புரிதி யாங்கு நாமுமை பொருட்டுப் பின்னாள். (௮௩)

கௌரிதாண் டவஞ்செய் வோமக் காலைநின் மருட நம்பொற்
றிவியகுஞ் சிதத்தாள் சூடச் செய்துமென் றருளிச் செய்தா
னவனரு டலைக்கொண் டிங்ஙு னடைந்துநோற் கின்றே னன்னே
யெவமகன் றின்புற் றேனின் னிணையடி யிறைஞ்சப் பெற்றேன். (௮௪)

அன்னைநீ யீண்டுப் போதற் கருந்தவம் யாது செய்தேன்
முன்னுகுஞ் சிகத்தாள் சென்னி முடிக்கொள நோற்ற தல்லா
லென்னையிங் கருள வுன்னி யெளிவந்த கருணை யென்னே
பொன்னல ரிதழி வேய்ந்தோன் புரத்தொருங் கமரு மின்னே. (௮௫)

அண்ணனின் பொருட்டிங் காட லறைந்தவா றுனைக்காண் பேற்று
லெண்ணியா னோற்ற பேறு மெய்திய தின்றே யென்பா
னண்ணுகார்க் கோட னாதி நாகருங் குலமு முய்ந்தா
மண்ணுமுற் றுய்ந்த வென்று வணங்கிநின் றிலைவது திப்பான். (௮௬)

வேறு.

விரிதலைக்கான் செயலொளிமாய் விசும்பெய்ப்பி லறல்பானு விதுமுன் மாயு
மிருளரன்முன் வலியின்மல மெத்தென்று விதழி முதல் யாவுமோட்டிப்
பானுருவிற் பாதிகொள்பான் மைக்கிணங்க வவன்சடைநாற் பயோதரத்தி
னிருமுகினீ பகிர்ந்தணிந்த தெனவகிர்கொண் டிலங்களகத் தியல்பு போற்றி.

இருளினைநின் னிணையின்யா மிரிப்பவினம் பற்றிவெருண் டெம்மை வாட்டு
மிரிசைசின தோதியெனக் கிளத்தவரு மிருசுடரைக் கெழுமு சீற்றந் [ங்
திருகுபுதன் காற்பிணித்த செயல்காட்டு மிரண்டணியத் தேச மென்ன
வருதாள வாதனைநன் னுதலணிகள் வயங்கோதி வனப்புப் போற்றி. (௮௮)

இருகுயினாப் பட்டடித்தொன் றென்றுமழி யாதிருந்தா லேய்ப்ப காய
பொருவரிய சிந்தூரப் பொடியொழுக்கு சிமந்த ரேகை போற்றி
பருமதிசா பக்கிரங்கித் தாலைமேன் முனிவுகொளீஇப் பாதி யாகி
வருமளவிற்றன் பால்வைத்தருளினள்கொலென்னு நுதன்மாண்பு போற்றி.

இருபுறத்தி லொதுங்கிவருப் பெய்துகுழ லங்குரித்தற் கிடங் களாக
வருகிலைக்கொ ளிரண்டால வாலமே யிடைமறைந்த வகையா தென்னி
னருகிலைத்தாம் விர்துமதி மண்டலத்தி னிறைந்தெழும்பு மமுத மேலே
பெருகவறப்பொங்குதலினெனப்புகன்றஃதேகிறுத்துமிளிர்புருவம்போற்றி.

கரமிசைநாந் தரித்திடுநற் கழைச்சாப மலர்ச்சாய கங்க ளாதி
வாமுறக்கொண் டேற்றானை யெரித்தானை மற்றுமொரு மதனை நம்பான்
மருவுறவைத் திடுதுமியன் வலியடைந்து வெல்கவென வகுத்தாள்கொல்லென்
றுரைசெயவப் பரமனுளங் கவர்ந்தொளிருந் திருவிழியி னுருவம் போற்றி.

ஆயமதத் துங்கொளிய வணிநீல வாதனத்தி னமர்ந்திட் டாங்கு
மேயநடு வியன்கறுப்பு மிளிர்மணியும் வெண்டாள விதானம் வேய்ந்த
சேயமணிச் செய்தொடையிற் றிகழ்கடையுஞ் செவ்வரியுஞ் செப்பும் வாயிற்
கேயநிரைத் தோரணத்தி னிலங்கிறைசார் திருரோமத் தெழிலும் போற்றி.

குலவளிகட் குணவளியாக் குறித்தனுக வேறுமிடாக் கொடிய வாகி
நலனறுசண் பகமிழித்து நயனவளி யருகரா நயங்கூர்ந் தென்று
மிலகுகரோற் பலத்தளிக ளெழுந்தாடிக் களிகூர வியல்பிற் றாகி
யுலவுகுளிர் மணங்கமழு முயிர்ப்பெறியுந் திருநாசி யுருவம் போற்றி. (௬௩

விருப்பூரந் நாசியின்மூ ரற்கிடைந்த பரிபவத்தால் விழுமமீக்கூர்ந்
திருப்பூர வாற்றாது நான்றிறப்ப நேருற்றாங் கொளிர்முத் தோடுங்
கருப்பூர மாதிவிராய்க் கமழ்வீடி கையிற்பொலிந்து கருப மெட்டுந்
திருப்பூர மணங்கான்று செவ்வாம்பல் வெள்ளாம்பல் செயும்வாய் போற்றி.

முல்லைமுறுக் கவிழ்ந்துடைய முருந்துவமை நினையுமோன் முதற்க யற்க
ணல்லுகர மிகாமாய்ப் பிறந்தகத்து நீத்தலுறீஇ நலியத் தன்பாற்
புல்லுபத முருவழியப் புதுவயிரஞ் செம்மணியாற் புனைந்து வைத்தா
லொல்லுமெனவியற்கைசெய்யொளிகான்றுமிளிருநகையொழுங்குபோற்றி.

அரனுருவ நின்பாலே யாகுமெனல் பிரத்தியக்கத் தறிவித் தாங்குப்
பாவுமுத்தி புத்திவிழை பவர்க்கருளும் வலத்திடத்தப் பரமன் சாயை[பால்
விரவுறக்காண் டருப்பணமாங்கபோலமுங்கட்கயலொடுபோர்விளைப்பத்தன்
வரிமகரங்கொண்டெனவப்பெயர்ப்பணிகொடிருச்செவியின்வனப்பும்போற்
[றி

இருகார்க ளிருதனுக்க ளிருகிடைக ளிருவளைக ளிருச கோர
மொருகாம ரூபிவிம்ப மொன்றுபிறை யொன்றுமுகி லொன்று மௌவ
னிரைமேவு மாமதியொன் றுள்தாகி யொருவாறு நிகர்த்தி யாண்டுந்
திருவாருங் கருணைதொடர் பின்றியெழுந் திருமுகமண் டலச்சீர் போற்றி.

பணிலமெலா மிகவலறிப் பயமருவி யுடல்வெளுத்துப் படருற் றேங்கத்
திணியகல்பூ கதங்கண்முத்தஞ் சிந்துபுவிண் விரைசெலவிற் சென்று நின்றுந்
தணிவில்சதா கதியலைப்பத் தள்ளாடித் தலைவிரிந்து நடுங்கச் சாடி
யணிதிகழ்மூ வரையுமடுத் தமைந்திலகு திருக்களத்தி னழகு போற்றி.

நீண்டளவே சிறுதிவலை திருப்பூட்டு மங்கலமுற் சிதைக்கு மாற்றல்
பூண்டவிட மொருங்கயின்றும் பூதேசன் மாதேவன் புரையின் றோங்கற்

மீண்டுகிய மாயோக ரூடியின்மங் கலநாம மியல்பிற் றுங்கி
மாண்டருபல் லணிக்காசாய் மலிதருணை மங்கலநாண் வண்மை போற்றி.
அருந்தவஞ்செய் தானுமினை யாதுமென்ன வடுக்கலுறீஇ யமர்ந்து வேய்தான்
வருந்தவிய லாதுனக்கு மதித்ததனை வருந்தலமை யென்று மாற்றந்
தருந்தகையி னப்பெயர்கொண் டதுதங்கியத் தனக்குவமை தானே யாக
விருந்தவிருந் திருத்தோருமியைபுறுபன் மணிப்பணியி னெழிலும் போற்றி.
வளைதலுறு யாத்தலுறும் வல்லகியின் றண்டிரித்து வயங்கு செச்சைக்
கிளர்நறுந்தார் வாடுதலிற் கீழ்ப்படுத்து கூர்ப்பாத்தின் கெழுசீர் போற்றி
யளகமலை யாண்புகுந்தம் புயங்கோட லலைந்தென்று மமா வோட்டி
வளர்புவன போகமெலா மகிழ்ந்தளிக்குந் திருக்காத்தின் மாண்பு போற்றி.
வித்துருமம் வகிர்ந்துநுதி வியன்வயிரம் பதித்தாங்கு விளங்குஞ் செய்ய
கைத்தலமார் விரனிரையு மன்னவற்றி னுகிர்நிரையின் கவினு மேன்மை
வைத்திலகுமேற்கோளாய்வாருணைநூலிதன்பாலேவந்ததென்ன  [போற்றி.
வித்துவமெய்ச் சிரோமணிகள் விரித்துரைப்ப வொளிர்வரையின் விதமும்
இன்பாலி யெவைக்குமொரு ளீசனுகர் தாவெழிற்பே ரின்பவாரி
தன்பால னமுதநிறைத் தொளிர்சீல மூடிகொள்பொற் றசும்ப ரென்ன
வன்பாச மறப்புடவி வந்தருளெங் குலக்காழி மணிக்கு நல்கு
மன்பாரு மிருஞானத் திரட்சியென வமைந்திலகு மம்மம் போற்றி. (கOரு)
சொன்னமலை மணிச்சிகரந் தொடுத்திழியு மருவியெனச் சுணங்கு பூத்த
வன்னமுலைத் தாளவட வனப்புங்கீழ் மலைத*னின்மேன் மலைச்செல் வானிற்
றுன்னலரி துருவசூத் திரச்செலவி னடுத்தோன்று தோற்றம் போல
மன்னியவத் தாளவட மத்தியிற்செம் மணியார வனப்பும் போற்றி. (கOச)
விண்டுவைமாத் திரங்கொள்வட தளிர்விலக்கி மூவர்முதல் விபுத ரோடு
மண்டமெலாந் தனில்வகித்தப் பவஞ்சமுறி வறிவிலபாத் தமைத்த தேகொன்
மண்டுசரா சரம்பிரித்த வரம்புகொலென் மயிரொழுங்கும் வகைமூன் றுவி
கொண்டமைதேற்றுதல்போன்மும்மடிமிலகுதிருவயிற்றின்கோலம்போற்றி
தற்பொறைகொள் வாளரிமுற் சமமென்ப முழுதடக்கிச் சுத்தா யாண்டு
கிற்பினுமிக் கன்பினருந் தவர்க்கலது நேர்தோன்று திமலன் பன்று
ளற்பினெறிந் தோல்வேணி யாதிபுனைந் தாற்றுதவத் தாலன் றூற்கே
பொற்புறுகைப் பரிசத்தாற் புலனுகி யுளதாகு நுசுப்புப் போற்றி. (கOரு)
தேவரொவ்வோ ருறுப்பாம்வை திகத்தோச் சிறவூர்ந்த சிவனை யங்க
மாவதொரு தட்டானே வேறுமென வதுகொண்டாங் கணிக ளார்ந்து
மேவுறுசீர்க் கடிதடமும் வென்றுமிறுத் துரோமசிரை விசயத் தம்பந்
தாவறநேர் குழியின்வலஞ் சுழியினமர் திருநாபித் தலமும் போற்றி. (கOஎ)

---

* இன்—சண்டு நீக்கப்பொருட்டாய ஐந்தனுருபு.

சுற்றினுற்பா தந்தரலென் றீற்றினுவப் பின்றியினைந் தீர்வா டன்று
லாற்றுநுபஃ றுணியாகி யதனுரிபட் டார்ந்தையுற வாம்பை வீட்டித்
தோற்றுபுழைந் தூசலினு டொறுமலைந்து தண்டமுறச் சுண்ட மாட்டி
மாற்றுயர்பொன்னுற்றோர்க்குவாழைநிறுத்தாங்கொளிர்கவாலும்போற்றி.

பங்கமுருச் சலமருவிக் கால்கவைப்ப வோடியளை பதுங்கித் தன்னை
யங்குநினைந் தினைந்தலவ னதனுமேல நடுங்குகுளி ரடைந்து நாளுந்
தங்குதலி னதுபெயராய்ச் சார்ந்திழியப் பவனனெண்டந் தாக்கி லோடத்
துங்கமிகு மியலெழிற்குத் துணைவேறின் றொளிர்சானுத் துணைகள்போற்றி.

கண்ணிணையாற் கயல்புகுதுங் காரகமே தன்பாடி காவ லாக
நண்ணிவரா லலைந்துவெள்ளத் துள்ளுண்டு நிலையின்றி நலியவாவந்
திண்ணியர்முன் னில்லாது பின்னின்று பிணிப்புண்டு தெறமேல செய்வன்
கண்ணினவம்புக்கிடனுய்க்கடைப்படவென்றோங்கினிகர்கணைக் கால்போற்றி

எத்துணையு முணர்ந்தாரு மியற்கருவி யாலளந்தே யீதல் போல
நித்தியமா ருயிரொவைக்கு நிகழ்கன்ம பலமொர்தட்டி னிறுவிப் போக
வத்துவொரு தட்டினிறீஇ வழங்கியபின் சிறப்பதந்தா மரைக டம்பால் [ற்றி.
வைத்துளபொற்றராசுகொலென்வகையமைந்தமணிப்பாட்டின்மாண் புபோ

அறனிறைநின் றைந்துமக மடக்குபுநோற் றுனுங்க ராதுமென்றுங்
குறுகமடப் புறவடியு முளமொருங்க நோற்றல்புற வுறுப்பி னுலுங்
குறிதரவைந்தும்மொருபாற்கொண்டனகொலெனச்சாரங்குலியுமாங்க
ணிறைதாளமவற்றினுநிரைத்துவைத்தாங்கிலகுமுகிர்நிரையும்போற்றி.

பழுதுணங்கல்குவிதன்முதற்பளகொன்றுமின்றியண்டப்பகுதியாவும்
வழுவில்வியாப்பியமாகமலர்ந்தருட்டேன்பிரவகிப்பமணந்தெஞ்ஞான்றுங்
கழிபுலவிக்காலான்செங்காத்தொளியும்புறங்கொடுப்பக்கடிந்துகண்ணீர்
மழைபொழியுமன்பருளமலர்த்தட்ஞ்சார்திருவடித்தாமரைகள்போற்றி.

அண்டர்பிரான்புலவிதணிப்பான்றொழுமப்பதமறையோனுமாளம்
பண்டுமுடியண்டமெலாம்பறந்துழன்றுங்காணாதுபரிந்ததின்றொட்
கண்டனமக்கண்ணுதல்சேகரமெனமாமறையெங்கணங்கலித்தல்போல
வண்டரளமாமறைநூபுரமிசைக்கு

ஆரமரிகண்டுகனியான்பாறேன்கழைமுதல்வேம்பாகவீணை
சாரியைசார்பெயராகச்சாரிகையேகாளகண்டந்தத்தைவேயின்
சீர்கொடியதாகவரன்றிருவருட்பாவினிற்போலத்திகழ்பேரின்பஞ்
சாரவருள்பழுத்தொழுகுதண்குதலைமழலைமொழித்தகுசீர்போற்றி.

பேட்டனமும்பிடியுமலர்ப்பிரமனூர்பெருங்கானிற்பேதுற்றோட
வாட்டுமெழில்வாய்நடையுமபிலுமைந்துமதற்சமப்பவைத்தவாய்மைச்

சேட்டியலூர்திருந்துமியற்றிருமேனித்தெய்வமணச்சீரும்போற்றி
தேட்டமெலாஞ்சிறப்பவருள்சிவகாமசுந்தரியென்றிருப்பேர்போற்றி.

வேறு.

என்றரா விறைது திப்ப விமாசலே யெம்பாலன்பா
னன்றுநீ புகன்ற விந்த நற்றுதி யினிது வந்தே
மொன்றிய வன்பி னோது மூவரெவ ரவரி வற்றை
மன்றவிங் கினிது வாழ்ந்து மறுமைவீ டடைவர் திண்ணம். (ககள)

அனந்தநீ யமல னந்நா ளறைந்தவா றடுத்திவ் வேல்லை
நனந்தலே முன்ன ரேபோ னயந்துநோற் றமர்தி யெம்மா
னினந்தர வனந்த ரம்போந் தெ ரணிபாங் கருளு மென்றுத்
தனந்தனி நின்றோர் காணுந் தற்பரையேயிப் பின்னர். (ககஅ)

பங்கய மலரிற் சேக்கும் பகவன்மா லாதி வானோர்
தங்கரஞ் சென்னிகூப்பித் தாழ்ந்தருச் சனைசெய் தேத்தி
யெங்களை யருடி யன்னே யென்னகின் றிரப் பநாளும்
மங்கல மளிப்பாள் பாங்கர்க் கூளியர் வதன நோக்கி. (ககசு)

ஈண்டுநா மீசன் பூசை யியற்றுதற் குரிய வாக
வேண்டுப கரணம் யாவும் விழைதரக் கொணர்மி னென்றுத்
தூண்டின டன்பால் யாவுந் தேற்றிவைத் தருளும் வாய்மை
பூண்டவெம் பிராட்டி யாவி போற்றிய புரிந்தீ தாற்றும். (கஉ0)

தவமதற் குரிய வங்க நானமே தருப்ப ஞெதி
யவைதமக் கேது தீர்த்த மாகுமென் றமலே யெண்ணி
பவன்மலர்க் கரத்தின் மேவும் பாசினை நினைவிற் கொண்டா
ளவிர்மழுப் படையாங் கெய்தியடியினை யிறைஞ்சிற் றம்ம. (கஉக)

அப்பர சதனுல் யாவு மாடினர்க் களிப்ப தாய
திப்பய தடமொன் றாக்கிச்சிவன்முடிச் சசிமேற் சிந்தை
வைப்பவக் கங்கை யாண்டு வந்தன ளன்ன வாவி
யிற்பய னிறைத்துத் தூய்மை யியற்றிட விமயப் பாவை. (கஉஉ)

அத்தகு மேல்வை தன்னி னருளினுன் மாபி னூடி
நத்தெறி திரைநீர் வைப நவிற்றிய காட்டு வாளா
யுத்தம முனிவர் வாதே றாரவிமூன் னவர்க்கு ளோகை
பொத்தவம் மனுக்க ளோதித் தருப்பணம் புரிந்து பின்னர். (கஉ௩)

கூந்தலே வேணி யாக்கி மரவுரியுடையாக் கொண்டு
வாய்ந்தபை ங்குசையி னுய பவித்திர மலர்க்கை பூண்டா

ளாய்ந்தசா பாலத் தங்கி யாதியா யைம்மு கத்திற்
போந்தவும் மனுக்க ளால்வி பூதியுத் தாளஞ் செய்தாள். (கஉச)

உத்தம வங்க நெற்றி மார்பக முந்தி சானு
கைத்தலங் கண்ட முன்னாக் கவினிறை யங்க மெங்கு
மெய்த்திரி புண்ட ரீங்க ளணிந்தனள் வேத கொப்ப
முத்தியைக் கொழுந்து சீர் முற்றுமுறை செபிக்க லுற்றாள். (கஉரு)

வேறு.

தேவிமுன் னருள்பணி சேக்குஞ் சென்னியர்
சேவடி யிணைமலர் சேக்குஞ் சிந்தையர்
மேவிய பரிசனர் குழாங்கள் வீற்றுவீற்
றுவரு பொருளெலா மடைவி னீட்டுவார். (கஉசு)

போகித னுலகினிற் போகி யைந்தரு
வாகமர் மணிநிதி யருந்து தேனுமுன்
னாகிய* தெவ்வி மீண் டவணி புக்கவ
ணோரையி னொருபுடை யுறுவிப் பார்சிலர். (கஉஎ)

மயனைமுற் கூவியொண் மணிபொன் னாதியாற்
பயனிறை வட்டகை கரகம் பாசனம்
வியனுறு மஞ்சன கடமுன மேதகு
நயமிகு பொருள்பல நவில்கிற் பார்சிலர் (கஉஅ)

ஐந்தரு வாதியி லாரங் கண்டிகை
யுந்தொளிக் கோள்கையோ துகங்கண
முந்துபொன் மகுடங் குண்டலமுன் னுபவ
வந்தணர் கவர்ந்தவண் மலிவிப் பார்சிலர். (கஉகூ)

திரானுறு நந்தைப்த் திரைசு சீலையே
சுரபிசு மநசை யின் பெய்ரிற்றுய்யகோ
புரமுறு ஸ்ம்வகை க்கபில பொர்தா
திரையுறக் கொணர்ந்தவ் ணிரைவிப் பார்சிலர். (கஙய)

உலகிலெண †ணும்பரி னும்ப ரிம்பரி
னிலவுபஃ றீர்த்தமு மிரம்பு பொற்றத்த
பிலகுவாய்த் துகிலொடு மணிந்திருத்தியாங்
கலவறு கடத்திவண் ணுய்விப் பார்சிலர். (கஙக)

---

*தெவ்வுதல்—கவர்தல்.

†உம்பர்—ஈறுபோலி.

கந்தமிக் கூட்டிய தைலஞ் சூர்ணி
தந்தவெண் பொடியரி சனத்தின் வண்பொடி
யுந்துமா மலகத்தி னுலர்ந்த வொண்பொடி
வந்தவ ரேர்புடை யுலிவிப் பார்சிலர். (௧௩௨)

அரனமர் சிவபுரக் கணிய தாயகோ
புரமதிற் கொணர்தரும் பொருவி றேறுவித்
பரவுறு பஞ்சகவ் வியமும் பாதனத்
தூறுறு மாயிடை யுறுவிப் பார்சிலர். (௧௩௩)

மாபுளி யமைத்தவான் கிழங் வண்டலிர்
கிருதமொண் மதுச்சருக் கரைபிக் கேழ்கிளர்
பொருள்களாந் தொருங்குறப் புணர்த்த நல்லமு
தரிறப வமைக்கு நரருங்க ளோர்சிலர். (௧௩௪)

முக்கனி யுடன்மரு து முறைசெ யைந்தமு
தக்கடம்ப லநிறைத் தமைப்ப ரோர்சிலர்
தொக்க வான் பய நறுந் துகிலி னுல்வடித்
தொக்கநற் கடம்பல நிரைப்ப ரோர்சிலர். (௧௩௫)

தயிர்நெயி னிறைகடஞ் சுமைப்பு ரோர்சில
ரயிர்முதி ரிக்குத கம்ப லார்கலைவச்
செயிரறு கனிகளி னிரதந் தெங்கினீர்
வயினிறை பொற்கட முலிவிப் பார்சிலர். (௧௩௬)

நறுங்குற டரிஞ்சிய தேய்வை நாணஞ்சால்
புறங்கருப் புரம்புழு கொலிய குங்குமம்
பிறங்கிம சலமுகற் பெய்து சால்களிற்
றிறங்கெழு கலவைகள் சேர்ப்ப ரோர்சிலர். (௧௩௭)

சொற்படு கூரியதூய வாலரிப்
பற்பல வகைய செம்பாகச் செய்கையி
னற்புத விதவமு தபூப வர்க்கங்கள்
பொற்புற வமைத்தனர் புலவ ரோர்சிலர். (௧௩௮)

அவ்வகை யுறுக்களுங் கடவு ளான்றருஞ்
செவ்விய வயினியுஞ் செய்ய மாமணித்
திவ்விய பாசனத் தமைத்துச் சிர்ப்பட்டாத்
தூவயின் மூடிவைத் துவப்ப ரோர்சிலர். (௧௩௯)

உயிர்ப்பிறுஞ் சுருட்கொண் மெல் விலிப் பொண் பாக்கதி
யத்தகற் பூரமி லவங்கஞ் சாதிக்காய்

முயக்குறு மேலந்தக் கோல மேழுக
வியத்தகு வாசங்கண் மிகுவிப் பார்சிலர், (௧௪௰)

தொண்டகந் தமருகம் படகந் தூரியந்
திண்டிமம் வளைகிணை திமிலையானகந்
தண்டுமைத் தளமுழா தக்கை தண்ணுமை
கண்டமுன் னியம்புநர் கருல்வ ரோர்சிலர். (௧௪௧)

ஆடக நவமணி யாதி யாற்புரி
தோடவிழ் பூகத மரம்பை தோரண
நீடுறு கழைநிரை நிறுவி யாங்கணும்
பீடுறு மணியெலாம் பிறக்குவார்சிலர். (௧௪௨)

கற்பக மலரிழை யாதி காமரு
பற்பல பொருளிற்பூம் பந்தர் நாட்டியாங்
கற்புத மணிமல ரலங்க றூக்கமேற்
பொற்புறு விதானங்கள் பொலிவிப் பார்சிலர். (௧௪௩)

அலகிடன் மெழுகுத லாங்கு வெண்சுதை
யிலகுற வொழுக்குத லியைவிப் பார்சிலர்
புலனெலா மிபசலம் பொழீஇந றும்புகை
பல்மல ராதிகள் பரப்பு வார்சிலர். (௧௪௪)

பரிபுளி வருமலர் மாலை யிண்டைதார்
நிரைநளு மவ்வன நிலாஞ்சு வன்னக
விரைதளிர் மலர்கள்கூ விளம்பைந் தூர்வைமு
னுரைசெய்பல் பொருள்களு முறுவிப் பார்சிலர். (௧௪௫)

ஒன்பது கண்டமு முரைசெய் தீபமு
மன்புவி முழுதினும் வயங்கு மாண்பொரு
ளென்பன யாவையு மீட்டி யாயிடை
யன்புள மகிழுற வமைவிப் பார்பலர். (௧௪௬)

வேறு.

இன்னன பலவு மிவர்செய லாக விறைவி முற் செபமுடித் தெழுந்து
தன்னமர் காதற் சீதளி நாதன் சபரியைக் குறுந்திரவி யங்க
ளென்னவு மமைந்த வகையெலா நோக்கி யிலங்குமத் திருத்தளி நாதன்
முன்னுற வடாது முகத்திருந் தென்று முடிவிலாப் பூசையின் முயல்வாள்.
கருத்துறப் பிராணு யாமமுஞ் சகளீ கரணமு மியற்றிமுன் னிலங்கும்
பருத்தபன் மணிச்செய் வட்டகை களிற்சீர்ப் பாத்தியா சமனமர் க்கியநீர்

திருத்தக வமைத்துச் சிவார்க்கனைங் கான்முற் றிகழ்தரு துவாரபூ சனைக
ளருத்தியின் முடித்தா ளகில மூர்த் தனையே யருச்சித்தாங்கருள்பெற நின்றாள்.
ஐவகைச் சத்தி யந்தரி யாக மாற்றியா தனங்கற்பிப் பாளாய்
மெய்வகைச் சத்தி யாதிசத் தியந்த மேதகப் பூசித்துப் புவன
முய்வகை யமர்ந்த வருட்குறி சூழ மூர்த்திநி வேசன முஞற்றிப்
பெய்வளைக் கரத்தாற் றண்டமே முண்டம் பிறங்கிடும் வத்திர பங்கி. (கசக)
மும்மையும் புரிந்தாங் கிலிங்கவா கார முன்னுரு தொருபது காங்க
ளோமுகம் பதினைந் தருள்பொழி விழிக ளோங்கலை யாதிய வமர்ந்த [செய்
செம்மைகொள் வேணி யெண்ணிரண் டாண்டிற் றிகழ்பளிங் கு நவபாவனை
தெம்மையா ளுடையான் வித்தியா தேகத் தினைக்குறி யிடைநிய சித்தாள். ()
நேத்திர நியாச மைம்முகங் களினு நிலவுறப் புரிந்துபன் மலர்கள்
சேர்த்திமென் கரங்க ளஞ்சலி யாக்கிச் செப்பியைந் தெழுத்தை யச்சிவனைக்
கூர்த்தமெய்ஞ் ஞான னந்தநிட் களவி யாபியாய்க் குறித்தவஞ் சலியை
மீத்திகழ் துவாத சாந்தத்தி னளவு மெல்லென வுயர்த்தியவ் விமலன் (கடுக)
அலரிகாந் தியனுப் புருநடு வளவு மாங்குநின் றிறக்குபு கோடி
நிலவுகாந் தியனுய் மெல்லென விதய நிறுத்தியவ் வஞ்சலி யதனுண்
மலரிரோ சகத்தான் வந்திலங் குறுபா வனைபுரீ இச் சத்தியோ சாதத்
திலகுமக் குறிமா முடியினுய்த் துலகின் பெய்தவா வாகன மியற்றி [கடுஉ]
திருமிகு மனைய நிட்கள சிவன்றன் றிகழ்சதா சிவனருட் குறியின்
பிரமரந் திரத்தா லிருதய கமலப் பீடசா லிடஞ்சித்தினி தமர்ந்து
மருவிவீற் றிருப்ப தாகிய நினைந்து வயங்குதா பனசந்நி தான
முரியசந் நிரோத முஞற்றியைம் முடியி னும்மருக் கியங்களோந் தூதவி []
ஆயபின் னிதயா தியநியா சமுஞ்செய் தடியிணைப் பாத்தியம் வதனத்
தேயவா சமன முடியருக் கியந்தந் திருசர நிறைபுட்ப தான
நேயமோ டளித்தம் மாலிய முழுது நீக்கியோர் மருமலர் புனைந்து
வாயவண் சுகந்த தைலமுன் னுய மஞ்சனந் தரமனம் புரிந்தாள் [கடுச]
ன்னது நோக்கு கூளிய ரதற்கா மரியன திரவியம் யாவு
ன்னரங் கமைத்த சால்களி னின்று முழுமணிக் கலசத்தின் முகந்து
ன்னிரு கரத்தாற் றரத்தர வாங்கி விமலனார் திருமுடி மீது
ன்னுமூவிரண்டங் குலவள வுயர்த்தித் துணைக்கர கலசத்தி னொழுக்கும் []
ஞ்சனம் பசுக்கொம் பக்கிரத் திழியும் வண்பிர மாண்மா வாக்கி
ஞ்சனம் பரமன் றிருவுளங் குளிர்ப்ப மவிதை லாதிகார் மிடற்ற

மஞ்சனம் பனுக்கலங்கன்பினெவ் வொன்று வருமுறை வரிசையி னூட்டி
மஞ்சனம் படிக்குங் குழனடைக் கௌரி வயங்கிய வவற்றிடை யிடையே. []

விரைமலர் புனைந்து நறும்புகை சுடர்கை வேத்திய மாதிதங் தலர்சேர்
புரையகல் சத்தோ தகமுட னூட்டிப் போற்றுமெண் பாவொரு பதமென்
றுரைமறுத் திகழு முருத்திர மூலமுன முறவோதி யாங் கனைத்தும்
வரைபட வாட்டி யீற்றினிற் சாந்த மணிப்புனல் மணமலர்த் தோயம் (௧௫எ)

மறைபுக திரிசு பன்னாநன் கமைத்த வனம்விசே டார்க்கியோ தகமு
முறைமையி னூட்டி முடித்தபி டேக மொழியுமக் கணங்கழி முன்னம்
பொறையெழிற் றிருவொற்றுடையிட்டரம்புலர்த்தினள்புகன் றுதன் றனைத்த
னிறையை யாட்டு நர்கட் கருட்புனலாட்டி யிருங்கதி யளித்திடு மியல்பை ()

யாவரு முணர்ந்தாங் கச்செய றனைநின் றின்புறக் கருதியிவ் வுலகை
யேவிசன் றருளெம் பிராட்டிமஞ் சனஞ்செய் நீரும் புலர்த்திய வளவே
தூவிய னீறு சாந்தமக் கதைபைந் தூர்வைகூ விளமணிந் ததன்பின்
மேவுபொற் கடிசூத் திரங்கௌ பீனம் விலையிலாப் பீதநேத்திரமும். (௧௫௯)

நவமணி குயின்ற கோளகை மகுட நன்மணி கண்டிகை யாருஞ்
செவியணி யுபவீ தந்தொடி யாதி திகழ்தொடை யிண்டைமுன் னணிந்தன்
பவிரில யாங்கம் வேண்டல்போ காங்க மருச்சித்தாங் கலர்நிறைத் தங்கைத்
திவியவஞ் சலியான் மும்முறை தூவிச் சிவாக ளாணவ வலியை. (௧௬௦)

வாட்டமெய்ஞ் ஞானம் வழங்கிய புரியும் வாத்தவாந் தூபதீ பங்கள்
கோட்டுபு குடிலை வரைந்தென வதன்பிற் கோதறு பூசனை புரிவோர்
சேட்டிள மதிசேர் வேணியெம் பிரான்பாற் சேர்தர முனையதற் போதங்
கூட்டுமுட் செயலை வெளியறி குறியாக் குயிற்றுமா நிவேதனம் புரிவான் ()

கூளிய ரங்கட் பரப்பிய வுணவின் குவான்முழு தங்கர மலர்நீர்
நீளுறு புரோக்க ணம்மூன மியற்றி நீர்க்கண முதலிரு நான்கென்
றாளுமச் சுமக்கா ரம்புரிந் தவற்றி னமைவுறும் விடத்துவ மகன்று
சோரிலா வமுதத் துவம்பெறு மறமுற் கூறியப் பாவனை குயிற்றி (௧௬௨)

இன்னுரை மனுவோ டெம்பிராற் கூட்டி யிலகுபா னீயமு மீந்து
பன்னுமா சமனீர்க் கியமளித் தினிய பாகிலை யுடன்முக வாச
முன்னளித் தரிய புகைசுடர் கோட்டி முதியமா தீபமுன் னனைய
மன்னுற சிவந்து வந்தரப் புரிபா னிதமவி தீபமும் வயக்கி (௧௬௩)

அருட்டிரு நீற்றை யங்கையா லள்ளி யணிந்துதர்ப் பணநிழற் கவிகை
சருட்டியா லவட்டங் கவரிவீ சனமுஞ் சொல்லுப சாரங்க ளெல்லாங்

தெருட்டியபுரிந்துசெம்பொற்பாசனத்திற்றிருத்தியாங்கமைத்தகடவிளர்க்கைதப்
பொருட்டிரு நாம மாயிரம் புகன்று புசர்தனன் சேவடிப் போதில்.

செங்கரத் தொளியான் முன்னிற மறைந்து செந்நிற மாகவோ வொன்று
விந்திதத் தோடு சாத்தின னமலை யெம்மனோர் மும்மலந் தியல்பை
யங்கினி தடக்கிச் சிவமய மாக்கி யடிநிழற் புகுத்துபே ரருளை
யெங்களுக் குணர்த்தி தீரிசன மரபி னிலங்குறக் காட்டுத விழைய. (கசுரு)

விமலையின் னறுகக் கதைகண்மா லூரம் விரைமலர் காமலர்க் காந்த
டமிலுற நிறைத்தாங் கஞ்சலி புரிந்து தருமியற் பவித்திரஞ் சாத்தி
யமலவைந் தெழுத்து மழுத்திய வுளத்தி னன்புறு செபமினி தாற்றிக்
கமைகொளச் செபமுங் கன்மமு முயிருங் கண்ணுநல் வாதமென் காத்தில்.

ஐயவேற் றருள்கென் றங்கைநீ ரலரோ டளித்தன டுதித்தனர் தாறுந்
றுய்யமாண் சிவாங்கி வினைமுறை முடித்துத் துதிசத வுருத்திர மாதி (சு)
செய்யன புகன்றிம் முறையின்முப் போதுந் தினந்தொறுஞ் செய்துல குயிர்
ளுய்யநற் சானம் யோகமே சாந்தி தாந்திக ளுறத்தழீஇ நோற்றுள். (கசுஎ)

வேறு.

ஆன பாலினைப் பானையை யம்மூலை வெண்ணெய்
மேன கக்கொளுஞ் செய்தியின் விரிந்தெங்கு நிறைந்த
மான மெய்ப்பர சிவம்வெளி வயங்குறக் காணுந்
தூர லச்செய லருச்சனை யென்பதா றுணிந்தோர். (கசுஅ)

அனைய தன்றியு மைம்புலப் பகைதெறு மறவீ
ரினிது கேண்மினீ ருலகுயிர் யாவையு மீன்ற
புனிதை யொப்புயர் விகந்தவள் பூரணி பொருவாத்
தனித வாச்சிய மறைமுழு துணர்தராத் தகையாள். (கசுகூ)

எம்மை வெம்மையும் பரத்தலே யியற்றெழில் பூண்ட
வம்மை யப்பர சிவத்தொடு மபின்னையா யனலம்
வெம்மை தண்மைநீர் விரைமலர் மணியொளி வியோமஞ்
செம்மை பால்சுவை பண்ணிசை முதலிய தொகைபேர்ல். (கஎ0)

ஏக மாகிநின் றறிவிச்சை செயல்களா யியைந்துந்
தேக மாதிகொள் சீவரை யுய்விப்பான் சிறந்த
வாக மவ்வனந் தானுங்கொண் டன்னதற் கியைபப்
போக மோக்கங்க டருந்திரு நாமங்கள் பூண்டு (கஎக)

செழுவு மாசகல் கூடத்தப் பிரமவைக் கியமே
யுழுவ லன்புகொண் டுறுபசு பதிகள்சய் யோகர்
தழுவு மின்னன தத்தம நெறிமுறை சாற்று
மழிவி லாச்சிவ சாயுச்சி யம்பெறற் கமைந்த. (கஎஉ)

உத்த மோத்தம நிபஞ்சிவார்ச் சனையென வுலகோர்
கைத்த லத்திரு மலகத்திற் கண்டுளங் துணிந்து
மெய்த்த பத்தியிற் சீலத்தின் விதியினிற் புரிந்தே
பொத்து மாசறுத் தரனடிப் புகுதுபே ரின்பம். (கஎ௩)

உற்று வாழ்வுறக் கருதியிவ் வொருபதி முதலா
மற்று மிப்புவி யிடைப்பல தலங்களின் வதிந்து
முற்று மந்திரங் கிரியைபா வனைவிதி முறையிற்
சற்றை வேணிபூ சனைபுரிந் தினிதுகாட் டிடவும். (கஎ௪

வேத வாகம புராணங்க ளாதிய வியனூல்
சாதுர் மாமறை யந்தங்க டன்னிகர் தாரு
மேதை யாகமாந் தம்மெனு மெய்கண்ட சுருதி
சீத நால்வர்வாக் காதிய திராவிட வேதம். (கஎ௫)

பன்னு மின்னமெய்ந் நூலெலாம் பதிப்பொரு ளொன்றே
யுன்னு மப்பதி யுமாபதி யேயுவன் றனே
மூன்னு சாருவ வியாபக னநாதிமா முத்தன்
கொன்று டைச்சரு வஞ்ஞதை யாதிய குணத்தோன். (கஎ௬)

அவனை யல்லவ ரரிபிர மேந்திர ராதி
தி வியர் மானுட ராதியர் யாவருஞ் சீவ
ருவரி நீர்புரை வியாப்பியர் சிற்றறி வுடையோ
ரவரு மாற்றல்சா லநாதிமா மலபெத்த ரெனவும். (கஎஎ)

அம்ம லத்துவ நீங்கியவ் வான்மகோ டிகடாஞ்
செம்ம கத்துவ சிவத்துவப் பேற்றினைச் சேர்ந்தே
யம்மை யப்பனு யமர்ந்தரு ளவ்வர னடிக்கீழ்
மெய்ம்மை யுற்றுவாழ் பேரின்ப மேவுதற் குரிய. (கஎஅ)

சிறந்த காரண மகம்புற மிரண்டினுஞ் சிவனை
நிறைந்த வன்பொடு நாடொறு நியதியிற் புரியும்
விறந்த தொண்டெனுஞ் சிவார்ச்சனை யென்னவு மேலா
யறைந்த வாருயிர் போலுமீ தில்வழி யுறவீர். (கஎகூ

ஆவி நீங்கிய வாகமே யொப்பன வாக
மேவு மேனைய தவமெலாம் விபலமா மெனவு
மோவி லாதுபன் முறைமுறை கையெடுத் துரைத்தே
யாவு மீன்றவ ளியற்றியிங் கிலகுறக் காட்டும். (கஅ௦)

நேரில் பூசனைப் பெருமையை விளக்கவு நிலையா
யாரு மம்மரி னுய்த்துணர் வின்மையி னானே
சோரு மாந்தரை மருட்டிவஞ் சகத்தினோ துணியே
மோரி னும்பிர மம்பிறி தில்லையென் றுரைத்தும். (கஅக)

பிளைய கண்டித மாம்பரி பூரண பிரமந்
தலையொர் மூர்த்தியிற் கண்டிதப் படுத்துதா பனமாம்
வினைய பூசனை புரிபவ னறிவிலா வீண
ரெனவும் பூசகன் பூச்சிய னென்றிரு பொருள்கள். (கஅஉ)

இன்ற தாகலிற் பூசனை யாற்பயன் யாதோ
வென்றும் வானர கிருண்மல பந்தமே மோக்க
முன்றி கழ்பொரு ளியாவையு முயலிடத் துலவை
யொன்று காயவம் போருகங் கமடத்தி னுரோமம். (கஅ௩)

இலகு வந்தியின் மைந்தனே யிரச்சுசர்ப் பாதி
புலனு றுதவிப் பொருள்களிற் பொய்மையே யென்றுங்
கலதி வாய்பறை யாகநாக் கடிப்பறைந் தருளா
னலனு றப்புக ளியதிகண் மேற்கொடு நடத்தும். (கஅ௪)

வலிம னத்திலார் மாட்டுட லாதியை வருத்தி
யலைத லன்றியோர் பயனில வயனெறி யதூதி
ரிலகு விற்பய னுறுநெறி யிந்நெறி யெனவங்
கிலையர் தம்மனச் செலவினுக் கிணக்கவே நிகழ்த்தும். (கஅ௫)

போத சாரப ராயுவ மாதிகள் பொருந்த
வோதி யாவையும் வசித்தவ ருவந்தன ரளிக்கு
மேத யார்பொருள் கொண்டுபோக் கியப்பொரு ளியாவும்
காத லாற்கொளா ரித்தவை நுகர்ந்துளங் களித்தே. (கஅ௬)

தீமை யொன்றிலாச் சிவனடி யவர்களிச் சிறந்தோ
ராமெ னவுல கறிந்தவர் தடுத்திடற் காகத்
காம நீறகண் டிகைமுதல் வேடமுந் தாங்கிக்
கீழ மாதியுட் காந்துநற் றொழில்வெளிக் காட்டி. (கஅ௭)

தாமுந் தம்புக னம்பியே சார்ந்தவ ரெவரு
நாம வெங்கிர யத்துறு முன்னெறி நயந்தே
சேம நீருல கத்திடைச் சிற்சிலர் திரிவார்
தோமு ளாரிவ ரூழ்வலி சொல்லுதற் கெளிதோ. (௧௦௮)

இனைய பாதகர் வஞ்சக மார்க்கமெய் யெனவே
கனவி னுங்கரு தாமலெம் மன்னோதான் காட்டும்
புனித மார்க்கநின் றுலகுய்ய வீண்டு தூ புகன்று
முனிவிர் காளுமை யாங்ஙன முயறவஞ் செய்நாள். (௧௦௯)

ஆண்டு நூறுசென் றிடப்பிரி வாற்றொணு தவன்போ
லீண்டு மாதவங் காண்டகு வெள்ளிவெற் பிகந்து
மாண்ட குங்கட மதிமகம் பருவம்பொன் வாரம்
பூண்ட நற்றினத் தறனிறை பிறைமுடிப் புனிதன். (௧௧௦)

வேதன் மேதகு மாதவ ராதிய விபுதர்
மாதபோதனர் நந்திமுன் னோர்குழீஇ வயங்கும்
பாத சேவையர் நாவையர் துதியினர் பரவிப்
போத மால்விடை யூர்ந்துமை திருமுனம் போந்தான். (௧௧௧)

போதல் காண்டலும் பொள்ளெனப் புடவியி னெழுந்தா
ளாத ரப்பெரு வெள்ளமீர்த் திடமிதந் தமலன்
பாத மீதுறப் பலமுறை நிலமுறப் பணிந்தா
ளேத கம்பக மழையுட னெனந்தன ணிமலே. (௧௧௨)

உளத்தின் மிக்கெழு மன்பினப் பானரு ளொருவா
வளத்தின் வாய்மைகள் வழுத்திய மனக்கொளீஇ வருதன்
களத்தின் விம்மலுத் தழுதழுத் தலுமுறக் கணற்கட்
குளத்தி னுனைவாய் குழறிய துதிபல கூறி. (௧௧௩)

மறைபி னந்தமு மொருசிறி துணர்வுறா மரபி
னிறைவ நீயிவ ணெய்திய வெய்திய தென்கொ
னிறைகொ ணற்றவ மெனக்கெனப் புவிதொழ நிகழ்த்து
முறைமை யினின்னன பற்பல வற்புரை மொழிந்தாள். (௧௧௪)

அடியின் வீழ்ந்துமுன் வேண்டியாங் கம்பகங் குளிர்ப்ப
கடன நாயக காட்டியிங் கருளென நயவா
செடிது போற்றுபு நின்றன ளத்துணை நிறைநீர்த்
தொடுமு ளேற்றிடு மனத்தனு தியரவட் சார்ந்தார். (௧௧௫)

சார்ந்த நாகர்க ளாங்கரன் றாளிணை மலர்க்கீழ்க்
கூர்ந்த வன்பொடு பணிந்தெழுந் திருகரங் குவியா
நேர்ந்து நின்றனர் துதிபல புகன்றனர் நிமல
னோர்ந்த தண்ணருள் வெள்ளத்துட் டிளைத்தன ராங்கே, (௧௯௬)

முன்னெ ழுந்தரு ளண்ணலக் கௌரியுண் மோத
மன்ன வவ்வனத் தழகிய சிற்சபை மாடே
மின்னி லங்குபன் மாமணிப் பீடிகை மீது
கன்ன லஞ்சொலெ மன்னைகண் களிப்புற நின்றான். (௧௯௭)

மந்த காசமு காம்புய னாகியவ் வரத
னுந்து மற்புத வடிவுகொண் டருளிய வுன்னி
யிந்து கோடிநேர் மேனியி லைந்துதோள் வலத்த
மைந்த சூலமொண் மழுத்துடி சிலீமுகம் வாளும். (௧௯௮)

வாமம் வீசிய மலர்க்கரம் வன்னிநீள் பாசந்
தோமில் கேடகம் பிநாகமுஞ் சொற்றிரி சுபன்னங்
கோம ளந்தரு சுவன்னகங் கொக்கிற காதி
நாம மார்தரு மணிப்பணி விதுமுது நதிமுன. (௧௯௯)

கலவு றப்பெறு செக்கர்வே ணியுமிரு காதின்
வலமும் வாமமுங் குண்டல தாடங்க வனபு
நிலவு பாற்கர நயனமு நெற்றிக்கண் முகிழ்ப்புங்
குலவு மாமணி கண்டமு மார்த்தின் கோப்பும். (௨௦௦)

மனுமுன் னாலுந்தோ லாடையு மறைச்சிலம் பார்ப்பு
நனியி லங்குருக் கொண்டுமை காண்கென நவின்று
சினவு மாமுய லகன்புறம் வலப்பதஞ் சேர்த்தி
யனக னுங்குறு மனந்தனை யணியுற வழைத்தே. (௨௦௧)

பாங்கு மாமணி ராசி*வி ராசித படமேற்
றூங்கு மாறுவா மாங்கிரி குஞ்சிதந் தரித்துத்
தேங்கு வாமசா னுவினிற்கரக் கோடனைச் சேர்த்தங்
வோங்கு மங்கிரி வாசுகி தனையுறப் பிணித்தே. (௨௦௨)

வனை மாப்பணி யாவையு மேனைய வுறுப்பிற்
கான மாப்பணி யாவணிந் தாடக யேருந்

* விராசிதம் - விளக்கம்.

தான மாவதில் வனத்தென வுரைத்திடத் தயங்கு
ஞான மாசபை நாப்பணின் றருளின னாதன். (௨0௫)

இந்துவின் காந்த பருப்பத மாக வெம்பிரா னிற்றுரு வால
கந்தர நீர்பெய் கந்தர மாகக் கவின்சடை தடித்ததாத் துடிக்கண்
ணந்தெழு மோசை மணிமுகின் முழக்கா மலர்விழி பொழியருண் மழையாப்
பைந்தொடி யுமையா மோடதி குளிர்ப்பப் பவனமுற் றுயிரெலாந் தளிர்ப்ப

கொன்றையங் கானி லிருண்மலக் கலைகள் குமைத்துயர் சிவானந்த போக
நன்றருந் துறநோன் பியற்றுமா தவரா முழவர்க ணயந்தஃ தருந்த
வென்றுவெண் மதிமண் டலநிகர் தாள மெண்கண னிருகரம் பிடிக்க
நின்றுமால் குணில்கொண் டதிர்முழ வடிக்க நிரம்பிசை நாமகள் படிக்க. ()

ஐம்முக முரச மருணந்தி முழக்கத் துருவக மட்டைரு பகமே
விம்மிசை யடமே சந்திரி புடைசம் பையென விசைமறை விளம்புங்
கொம்மைநற் றுள மேழுமவ் வகையிற் குலவுறக் கௌரிதாண் டவத்தை
நம்மையா ளுடையா னம்மையுள் ளுவந்து நயனங்கள் களிப்புற நடித்தான் ()

களியுமை நயன வளிகளாந் நாட கப்பத கமலநன் மதுவை
யளியொலி யதன்கட் சிலம்பொலி யாகவருந்துபு களிக்கட லழுந்தக்
கிளர்மணி ராசி விராசித வாமாங் கிரிமுடி தரித்தா விறையு
ளளிமிக வேணி யொளியுவ ணையிற்போ யன்னதைக் கதிருல காக்க. ()

நீற்றொளி யினன்கீ ழிந்துமண் டலந்தா னிற்றலென் கொல்லென நிலவ
வீற்றுறு மீரைங் கரங்களெண் டிசையு மேவுற வுமைதிரு வுளத்தை
யேற்றுகட் கருணை நோக்கினு னிரப்பி யெழின்மிகு மனையதாண் டவம்பல்
வேற்றுமை திகழ நடித்தல்கண் டரிமுன் விண்ணவர் முனிவரர் தொழுதார்.

சனகர்முன் னால்வர் துதிபல தொடுப்பத் தகுமிரு வோரிசை மடுப்ப
வனத்பா ரிடர்சூழ்ந் தரவொலி யெடுப்ப வரம்பையர் மணிவிளக் கடுப்ப
வனமலர்க் கரத்தின் மலரொளி கடுப்ப வானவர் மலர்மழை யுடுப்பக்
கனகதுந் துபியந் தரத்திசை படுப்பக் கண்ணுதல் புரிநடங் கண்டாள். ()

சலதரங் கண்ட சாதகம் போலத் தபனனைக் கண்டதா மரைபோ
னிலமதி கண்ட சகோரம்போ லுவகை நிமிர்தர நெஞ்சநெக் குருகித்
தலைவனின் னடங்கண் டியான்புரி தவந்தான் சபலமா கியதெனி யென்று
வலகிலா னந்த வெள்ளமுள் ளமையா தாங்கெதி ரொடுத்தலே போல. (௨௧)

அரியநற் சிவாதி காமினி சிவாதி சுந்தரி யம்பிகை கௌரி
யுமைபிர சன்ன கோமள வதனும் புயத்தின ளாகியுள் ளுவந்து
வரசிவ கிருத சனனமா வுதறி லங்கன மங்கள சொரூப
பரமகல் யாண மங்களப் *பிரத மாநடம் பார்த்திவை துதிப்பாள். (உ௧௧)

வேறு.

ஓதும் பவாதி யட்டகப்பே ரொடுசோ தராதி யெட்டுருவன்
காதும் பவாம்பீ தியின்முழுகிக் கலங்குமு லகுக்கா தாரன்
நாதன் பவனே சிவன்கோடி ரவிசங் காச மேனியன்சொல்
வேதன் பவாய புவிமூர்த்தி விமல பரம சிவாயநம. (உ௧உ)

விறல்கொண் மகாச லாதியவாய் விளைசா ருவசா கரமூர்த்தி
யிறைகொள் சீத ளாம்புவரு டத்தா லிமையோா நரர்மிருகம்
பறவை முதல தரு பூதல பயிர்முன் னிருபா லுயிர்புரப்போன்
முறைமை புரிசர் வாயவம்பு மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௩)

பகர்மா சண்ட வெங்கிரண பங்தி களினுற் சகம்பொக்கும்
தகையோன் ககன சரகிரக தாரா தாமன் கபாலகர
னிகமார் போக மோக்கமரு ளிறைய னளவாக் கருணைநிதி
தொகுமீ சான ரவிமூர்த்தி தூய பரம சிவாயநம. (உ௧௪)

வலமார் வலாரிக் ககல்சுவர்க்க மருவ வருள்வோன் வேள்வியர்க்கப்
பல*தா யகனு பத்தெவர்க்கும் பாற்றி ன்வேயருரான் பசுபதிப்பேர்
நலனு லமைந்த சருவான்ம நாத னமலன் பசுபதியாம்
புலமார் யமான மூர்த்தியருள் பொழியும் பரம சிவாயநம. (உ௧௫)

உரமார் சண்ட மாருதத்தா லுலக முழுதோம் பாதாரன்
சரமார் பலபே தானிலத்தாற் சருவான் மாக்க டமில்வசிப்போன்
வரமார் தருமுக் கிரப்பெயரால் வன்னி சகனு யமர்ந்தருள்வோன்
முானு ருக்கி ராயவளி மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௬)

இயங்கு கடோர வன்னிரவி யிந்து விலோச னத்திரையன்
றயுங்கு பாலாம் பகமதனுற் சம்ப ரளரி புரந்தகிப்போன்
பயங்கொள் கடோர வுருத்திரநற் படிவாற் பஞ்ச முற்றொழிப்போன்
முயங்கு முருத்தி ராயவன்னி மூர்த்தி பரம சிவாயநம. (உ௧௭)

இரவி கிரக முதலமர ரினமா லிகையன் றனதொளியில்
விரவு சிருட்டி யுறவெளியாய் விரியு மண்ட ரூபங்கண்
மருவு முதனுப் பண்ணிறுதி மருவாப் பெருமைத் திருவுருவன்
வருபீ மாய நபமூர்த்தி வரத பரம சிவாயநம. (உ௧௮)

*பிரதம்-கொடுப்பது. * தாயகன் - கொடுப்பவன்.

சகல பயிரு மாவமுத கலையால் விருத்தி தரப்புரிவோ
னகில வுலகுங்.ககனசர தேசா லொளிசெய் தருண்முதல்வன்
றிகழு மிதழி சானவிகட் செவிமுன் னமர்சந் திரமௌலி
தகைமை மகதே விதமூர்த்தி தரும பரம சிவாயநம. (உகக

வேறு.

பாவுசங் கரனே யொப்புயர் விகந்தோன் பராற்பரன் றனக்கிலை பணிவெண்
றுரிமையிற் கௌரி யகிலலோ கத்தி னுயிரொலாந் துயர்தரு மலநோ
யரியவீ தோதி யகற்றுற நினைந்தே யடிக்கடி யிறைஞ்சின டுதித்தாள்
வருபசுங் குழவிக் குறும்பிணி நீக்க மருந்துதா யருந்துமா போல. (உஉ0

இவ்வியற் றுதிசெ யுமைமுகாம் புயத்தை யென்றுமன் விகசித மியற்றுஞ்
செவ்விய ஞானு னந்தசா கரத்திற் றிகழ்ந்தன வாதனின் றருளுந்
திவ்விய தேசோ மயசொரூ பகமா தினகர னென்றுரை யாடு
நவ்வியங் கரத்தோ னருண்மிக நோக்கி நங்கைகே ளென்றிது நவில்வான். ()

உலகெலாந் தழைப்ப நீநினைந் தமையிண் டுரைத்திடு பிருதுவி யாதிப்
பலர்புக ழட்ட மூர்த்திக ளுடனுய்ப் பவாதிமந் திரங்களோ டியைந்தே
யிலகியோ துநர்கட் கிட்டகா மியங்கள் யாவையு மீவதா யெமக்கீண்
டலகிலா னந்த மளிப்பதா யமைந்த வருந்துதி கேட்டுள மகிழ்ந்தேம்(உஉஉ

நீயுளம் விழைந்த வரமெவை யுரைத்தி நேரிழா யெனவுல கருளு
நாயகி மகிழ்ந்தெம் பெருமவீண் டுள்ள நயப்புற நின்னையான் றுதித்த
மாயிருந் துதியைப் பாதகம் பலவு மருவிய பதிதரே யெனினு
நேயமிக் குரைப்பி னவையெலா மொருங்கே நீங்கிமா புனிதரா யிடுக.

பின்னல கிலவாம் பல்பொருட் பெருக்கும் பெறற்கரு நன்மகப் பேறு
முன்னுறு யாவும் பெற்றுவாழ்ந் திம்பர் முகுந்தனு தியர்க்குமெட் டாத
நின்னடி நிழலிற் பின்னுற மருவி நித்தியா னந்தராய் வாழ்க
வென்னவ நீயித் தலத்திலென் னோடு மிடையறு திருக்கவென் றூன்றும்.

நின்புரி சடையி னின்றுமுன் னழுவி நிரம்புசா னவிநதி யொருவா
தென்பெயர் வாவி தனிலன வரத மிகபர மோக்கதா யகமாய்த்
துன்புறு சகல பாவமோ சனஞ்செய் தூயதா யமர்கவென் றமலை
யின்புற வுரைப்ப விறைவிறு யுமைநீ யெண்ணியாங் காகென விசைத்தான்.

அறைதரு வியங்கோ ளிறுதிவாக் கியங்க.ளாலுமை விளவிய தவைகள்
விறல்விதி வினையு மாயுயிர்க் குறுதி விளைத்துளந் தெளித்திடற் கென்ப

நிறையுமா தவத்தி ருமைக்கரு ணிமல னிலத்தினிற் றிலகமென் றுரைக்குஞ்
செறியுமவ் விதழிவனத்தினெலஞ்ஞான் றுஞ்சிவையொடுஞ்சேர்ந்துவீற்றிருக்கும்
கண்ணுதற் சிவன்செய் திருநடங் கௌரி காமமுற் றினிதுகண் டமையா
லெண்ணுநர்க் கெவையு மருள்சிவ காம சுந்தரி யெனும்பெய ரெய்ந்தவ்
வெண்ணைக் கொடியத் தளியினீசான விசும்பில்வீற் றிருந்தருள் புரிவா
ளண்ணறன் னேடுங் கிரீடைசெய் தென்று மமர்ந்துவீற் றிருந்திட மாதோ

இறையரு ணடனம் புரிந்தவத் தினத்தி னிலங்குகோ கிருதநீ பாதி
குறைவிலர்ச் சனைகள் சீதளி யாற்றுக் குளிர்தரு மகாவபி டேக
நிறைசுவை வருக்க நிவேதன வகைக ணிகேதனம் வலம்வரன் மறையோர்க்
கறுசுவை யுணுக்கள் கூவிள மிதழி யாதியா லருச்சனை முதல. (௨௨௮)

புரிகுநர் விசேட தினங்களின், விசேட பூசனை பொருந்துமெய் யன்பாற்
றருதுந ரிரதோற் சவமுறை யமைபிற்செய் தகமைய ரதுதரி சிப்போர்
தருவிமெய் யடியார்க் கமுதருண் மாகே சுரர்கட்டம் பூசனை தொடங்கும்
பெரியரின் னவர்பல் போகமு நுகர்ந்தெம் பிரானடி மலர்நிழல் பெறுவார்.)

என்றுரைத் தருளு மலயமா முனிதா ளிறைஞ்சுபு முனிவரெந்தாய்
நின்றுசீர்க் கௌரி தாண்டவங் கேட்டுச் சூழ்வினை யொழிந்தனங் கமலை
யன்றரி பாலென் வினவினன் விடையா தறைந்தன னிவ்வனத் தவள்செய்
கன்றியென் சிவன்பாற் பெறுவா மென்னை நயந்தருள் கெனமுனி நவிலும்.

## கௌரி தாண்டவச் சருக்கம்.

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௭௧௫.

———0———

## இலக்குமிதாண்டவச்சருக்கம்.

திருத்தளி யமலன் வாமச் செல்விபேர் நடனு னந்த
மருத்தளி நுமது கேள்வி மடுத்தனங் கமலை மால்பாற்
கருத்தளி யுறவி னுயிக் கானினேற் றிருந்து கண்ட
வுருத்தளிர் நடன மேன்மை யுறுவர்கா னோது கிற்பாம் (௧)

கீரசா கரத்தி னுப்பட் கிளர்மணித் தீவின் மேவுஞ்
சாருவ போக மீக்கூர் சுவேதமா புரத்திற் சாலத்
தேருறுப் பமைந்தி லங்கு சினகர மதனின் மிக்க
பாருறு முடிய னந்த பரியங்க மதனின் மேவி. (௨)

காண்டகு சிரத்திற் செம்பொற் கதிர்மணி முடியின் றேசும்
பூண்டகுண் டலமு மெல்லாப் புவனமுந் திகழ்செவ் வாயு

டாண்டசெங் கமலப் போதின் மலர்விழி வனப்புந் தோளிற்
சேண்டவழ் கதிரை நக்குந் திகழுமங் கதத்தின் சீரும். (௩)

வாதகல் லபய மாழி வாரண மமைந்த நான்கு
கரமுமா மறுவி னோடு கவுத்துவ மணிகொண் மார்பும்
விரவுறு சுவண வாச விளக்கமுங் கழல்க ளார்க்கு
மருவளர் நறிய செந்தா மரையடித் துணையின் மாண்பும், (௪)

சிரநுதன் மார்பு முன்னாத் திருந்திய வங்க மெங்கு
மருவுமுத் தூள னந்தான் வயங்குபுண் டரங்கொ ணீற்றிற்
றிரைமறி கீர வாழி திருவுருப் போர்த்த லேய்க்கும்
பொருவிலா வெழிலு மீசன் விழிமணி புனைந்த பொற்பும். (௫)

கருமுகி லனையநீல மேனியுங் கவினுற் றோங்க
வரிவையர்க் கெடுத்துக் காட்டு முவமனா யமருஞ் செல்வத்
திருமகள் பொறையின் மிக்க நிலமக ளென்று செப்பு
மிருவரு மிருபான் மேவி யின்புற விருப்ப வேனை. (௬)

எண்டகு விகங்க ராச னெண்டிசைக் காவ லோர்மற்
றண்டர்மா தவரெண் சித்தி யாதியோர் பணிந்து போற்ற
வண்டயின் மதுவார் செந்தா மரைமலர் விழிமு கிழ்த்துக்
கொண்டறி துயில மர்ந்தான் குவலய முண்ட கோமான். (௭)

அனந்தலி னெழுந்தம் மாயோன் சிரமிசை யங்கை கூப்பி
நினைந்துதென் முகந்தி ருந்து நிமலதன் பொருட்டிக் கானிற்
கனந்தரு கண்டன் செய்த தாண்டவங் கருத்துட் கொண்டு
வனந்திகழ் கண்ணீர் பாயப் பதுமவா சனறைப் மன்னி. (௮)

ஆனந்த *பரித னா†யா ரேவத வடிவி மேய
வானந்தங் கிந்து வேணி வரதனை வாம பாக
மேனந்தம் வினைக டீர்ப்பரன் வீற்றிருந் தருளும் வான்மை
சானந்த முறழ்மி டற்றெங் கௌரியைச் சானித் தானல். (௯)

அனந்தர மிவ்வா றன்னோ னுர்வமிக் குளந்தி னெண்ணுங்
கனந்தரு மலர்மென் கூந்தற் கயலிய னயன நல்கூர்
னைந்தலை யரம்பை யூரு நளிர்குளிர் புரையுஞ்சானு
வனந்தரு முகிழக் கொங்கை மலையர சளித்த நங்கை. (௧௦)

பூசனைத் தவத்தின் பேற்றாற் புதுமலரிதழிக் கானி
லீசனா நடனங் கண்டா னெண்ணியாங் கன்பர் தேர்ந்து

* பரிதன் - நிறைந்தவன். † ஆரேவதம் - கொன்றை.

பாசனை புரிய நல்கப் பாவையே யான்மற் றியானு
மாசனை யனைய மானுந் தோன்றிட மொன்றே யாமால். (கக)

பெட்டோன் வழிபட் டேத்தும் பிரியகா ரணியப் பூவை
தட்டகல் பிருகு பூமி தம்மொடு மந்நி ருத்தந்
கிட்டிமுன் காணப் பெற்றேன் கிளக்குமவ் வனத்திற் றுனே
யிட்டமிக் கமர்கின் றேனு லமிசததோ டென்று மன்றோ. (கஉ)

அப்பரிச மர்கின் றேனுக் கந்நடந் தன்னின் மேலுந்
தப்பரு மார்வங் கூர்வ தென்றிவை தானே யெண்ணிச்
செப்புத லின்றி யானெய் சித்திர பானுச் சேர்ந்த
தொப்பவுண் ணெகிழ்ந் திருந்தா னுவணகே துயர்த்த செம்மல். (கங)

வேறு

மனநெகிழ்ந் துருகு மெய்லையிற் றிருவம் மாயவ னடிதொழு திறைஞ்சிக்
கனமுடைந் திரிய வந்தரத் தோட்டு காத்திர நேத்திர கமல .
மனனமர்ந் தெனைநன் மார்பகத் திருத்தி வரமருள் பரமகல் யாண
புனைதுள வலங்கற் கந்தமார் †கந்த பூதர சிதர போற்றி. (கச)

வாரண நேமி கதைசரா சனம்வாண் மலர்க்கரத் தெடுத்தருள் வரத
வாரணம் பரவு மாதவ போத வங்கண பங்கய வதன
நாரண முகுந்த கேசவ பதும நாபபா ரணநவ நீத
பூரண முராரி வாரண சோகம் போக்கிய பாக்கிய போற்றி. (கரு)

குலமறை கவர்ந்து சலதியின் மறைந்த கொடியனைத் தடியமீனுய்த்தன்
செலுவினுட் கடனீர் முழுதலைத் துடனத் தெம்மடித் தம்மறை மீட்டு
மலரய னிடத்து நிலையுறக் கொடுத்த மாதவ யாதவ வரத
புலனெறி நீத்த நிலையின ரேத்து புராதன சுராதிப போற்றி. (கசு)

ஆதர நினைந்தாங் காதரம் பெருக வாதரங் கடைவுற வருளாற்
பூதரந் தனைக்கைப் பூதர மலரும் புவிநிழற் கவிகையாப் பொறுத்தே
காதர மோட்டிக் காதர நீட்டிக் களிப்புறத் துளிப்பெயல் கடிந்தோய்
போதரச் சுரர்முன் போதர விறைஞ்சும் புண்ணிய கண்ணிய போற்றி. (கஎ)

என்றுரைத் திறைநீ யஞ்சலி புரிந்த தென்னிவ னுளாங்கொண்ட தென்னை
யொன்றுமூ வுலகுக் கதிபனீ வணங்கு முயர்பொருள் யாதலீ துணக்குந்
துன்றுவா னவர்க்கு மூலகா ரணமாய்த் துலங்குறு மதனியல் சூழின்‡த்தாள்
மன்றவிம் மிதமா மென்றனக் கதன்சீர் வகையெலாந்தெரித்தி யென் றுரை

† கந்தம் - தோள்.

பிரமா முரல மூகையவிழ் கமலப் பெற்றியிற் பொற்றிரு மகடன்
வரிவிழி நோக்க மருவுற வாய்ந்து மந்தகா சத்தொடு வயங்குந்
திருமுக மலர்ந்து கருமுகி லனையான் றேங்கமழ் பூங்கடுக் கையங்கா [ம்
னரிதுமுன் னிகழ்ந்த சரிதமிங் குரைத்து மணியிழாய் கேட்டியென் றறையு
புகலுமுத் தொழிற்கு மூவர்க்கு முன்னோன் புந்திமுன் மூன்றுமுக்குணமும்
பகுதியுங் கடந்தோ னுளனொரு புருடன் பராற்பர தரனவ னவனே
நிகரின்மெய்ப் பரதத் துவபர சிவன்மன் னித்திய னவனில்யா முதித்தேஞ்
சகளமா முருவிற் றனதரு ளாகுஞ் சத்தியை யிடத்தினிற் றரித்தான். (உ0)

அனையளவ் விதழி யடவிமுன் னடுத்தா ளாங்ஙன மருச்சனை புரிந்தாள்
கனையிருண் மிடற்றெங்கண்ணுதற்பெருமான்காட்சிநேர்பெற்றனள்கதிர்கால்
பனிவரை யுயிர்த்த பான்மொழித் தொடிக்கைப் பவளவாயுமையவட்பார்த்துப்
புனிதனுள் ளுவகை நனியுற வருளிப் பூவைகேளீதெனப் புகலும் (உக)
பொன்னலர் கடுக்கை நமக்கதி காதல் புரிதலி னதனையிப் புவியின்
மன்னுறக் கிருத மாலையென் பெயரான் மலிவுற மலர்மகன் படைக்கு
மன்னாற் றருவை யலர்செறிந் திலக வடைந்துகாண் பவனெவ னவன்றான்
றன்னுறு சனன பாவமுற் றொழிக்குஞ் சாதமீதென் றுரை தந்தான். (உஉ)

அளிமுரல் கமலத் தணங்குகே ளுமைசெ யருச்சனைப் பயத்தினு லவட்கு
நளிர்மதி முடியோன் காட்டிய நடன நாகர்பூ மகன்சன காதி
தெளிவுறு முனிவர் பிருகுவா னருக்கர் திங்கண்முன் னிமையவ ரோடுங்
களிமிகு மவனி யாரொடுங் கண்டேன் கண்களாற் பெறுபயன்கொண்டேன்
அந்திலெம் பெருமான் பைந்தொடி யுமைகேட் டருள்வர மாங்ஙனமளித்தாங்
கிந்திரை யென்பாற் பிறக்கெலா மரிய வின்னருட் சிறப்பு நோக்கருளி
முந்துமச் சபையின னந்தலை யெனக்கூய் முகுந்தநீ யுகந்தநம் பூசை
சந்தத மியற்றி நந்தம தருகு தங்குகென் றங்கரு டந்தான். (உ௩)

மன்றலங்கூந்தல் வரிவிழி மலர்க்கை மணிமுலை மதிநுதால் கேட்டி
யன்றொர்நா ளிரணி யாக்கனென் றொருவ னசலமே யனையகாத் திரத்தன்.
வன்றிற லவுணன் வகிர்மதி புரையும் வக்கிர *தமிட்டிர னனுங்
கன்றிய மனத்தன் கொடுந்தொழி லுனே கைவிடாப்பொருளெனுங்கருத்தன்
அம்மற மிகுந்த வரக்கனோற் றடைந்த வருவர வலியினு லவனிக், கொம்மை
வெம் முலையைப் பாயலாச் சுருட்டிக் கொடுகுரை கடல்புகுந் தொளித்தான்
விம்மலுற் றயர்ந்தார் மண்ணவர் விண்ணோர் வேறொரு புகலிட மின்றி
யெம்மைவந் தடைந்தா ரிறைஞ்சின ரினைந்தா ரிதுபொறு துணமிக விரங்கி
மேலுயர் வரைகளெவற்றினு முயர்ந்த மேருவி னெண்மடங் குயர்ந்து
வாலியவுரோம முடல்செறிந் திருகண் வழங்கிடும் வடவனல் கதுவிப்

* தமிட்டிரம் - தந்தம்

பாலெலாக் தகிப்ப வெருத்தமேற் போரும் பற்களோ டிலங்கிடும் புதிய
கோலமாங் கோலங் கொண்டியா னண்டங் குலைந்திடக் குமுறொலி பரப்பி.
அவுணனுண் டேகு மவ்வழி யேகி பாழியு மளறெழ வலைத்துக் (கோர்ங்
குவவுமால் வரைக ளனைத்தையு முருட்டிக் கொண்டுசென் றிரணியாக் கனை
துவமனில் பெரும்போர் புரிந்துயிர் செகுத்தாங் கொதுங்கிய வசுந்தரை த
னைமீட், டவமகன் றிருப்ப வராமுடி நிறுவி யனந்தர மப்புவி மகளை. (உ அ)

அவனுடைத் தந்தை பிருகுமா தவன்பா லரண்புகுத் தவுணனை யாவி
கவர்செருக் கறிவை மறைத்தலின் மான்று கதிர்வரு வாளவெற் புடைத்துப்
புவனியெண் டிசையு மலைத்தன னதனாற் புன்கணுற் றிமையவ ராதி [யதி
யெவருமெஞ் ஞான்று மிடுக்கண்டீர்த் தருளு மெம்பிரான் கைலைசென் றெ
மணிமிடற் றிறைவன் றிருவடிக் கமலம் வணங்கியீ தரைப்பவெம் பெரும
தணிவிலா விரணி யாக்கனு லெமக்குச் சார்ந்தபே ரிடரினும் பெரிதாத்
தினியமா லென மாகிநின் றலைக்குந் தீங்கிது தாங்கிலே மெந்தாய்
பணியணி முடியெம் பரமவித் துயரும் பாற்றினை போற்றெனப் பகர்ந்தார்.

ஆயிடை யமலன் சேயினை நோக்க வயிலுடைத் திருக்கரத் திளைய
சேயவன் கமலத் தூயசே வடிகள் சென்னியிற் றன்னிய விறைஞ்சி
நேயமிக் கெதிரே நிற்பநேர் நோக்கி நிமலன்மால் புரிதுயர் நீக்கி
மாயன்மற் றவன்கொள் செருக்கினைமாற்றிவருகநீமைந்தவென் றுரைத்தான்

தாதைதாண் மீட்டு மிறைஞ்சுபு குமரன் சடக்கென வெண்†களிற் றுருவின்
மேதகு செருக்கி னின்றவென் னருகு மேவலும் வெகுண்டியா னுருத்தவ்
வாதிதன்சேயொடமர்த்தனனிளையோனயிற்படைதூண்டியென்செருக்கைக்
காதிவெள்ளெயிற்றைக்கவர்ந்துசென்றீசன்கழலடிதொழுதுமுன்வைத்தான்.

கந்தரம் புரையுங் கந்தர ளுங்குக் கடவுள ராதியோர்க் கருளி
நூந்தம்வாழ் பதியி னேகுதி ரென்னு நொடித்தனன் விடுத்தயிற் கரத்தெந்
கந்தனை மனமு கந்தருட் கரத்தாற் கந்தமார் தரவினி தணைத்து
மைந்தநீ யீண்டுப் புரிசெயற் கிதய மகிழ்ந்தன மென்றுவாய் மலர்ந்தான், ()

கூற்றுறழ் தடங்கட் குவவுமென் முலைப்பூங் குழற்பிறை நுதற்றுடி நுசுப்பிற்
கோற்றொடி கேண்மோ வனந்தர மெனது கோலத்தின் கோலத்தை நீக்கி
மேற்றிக ழவனி மாதைவேட் டுவப்பான் விரும்பியச் சுவன்னக விபினத்
தாற்றுபு தவஞ்சீ தளியா னடிக்கீ ழருச்சனை புரிந்தவ ணமர்ந்தேன். (ரு. ௬)

இருநில மகளு மென்னைவேட் டுவப்பா னீசனைப் பூசனை புரிந்து
மருவினா ளாங்கெம் மிருவருட் கோளு மதிமுடி திருவுள மதித்தெம்

† களிறு - பன்றி.

மருகெழுந் தருளி நும்மூளக் கருத்திங் காகெனப் பணித்தன னுங்கள்
பிருகுமா தவனு மணமுறை யவனிப் பெய்கனே தனையெனக் களித்தான். ()

வதுவைநன் மரபின் வந்தவவ் வதுவை மணந்தியா னத்திருந் தலத்தின்
விதுவைமா முடியெஞ் சீதளி நாதன் வீற்றிருந் தருட்ளி வடபான்
மதுவையுண் டளிகள் குழல்பயில் குழற்பூ மாதொடு மசீதாங் தருசிற்
பொதுவைபொற் கமலச் சேவடிப் பூசை புரிந்திருக் கின்றன னுங்கே.(௩௬)

இவ்வகை யாங்க னமர்ந்திடு நாளிவ் விறைபவன் மறைநனுன் கலரோ
னெவ்வமின் முனிவ ரெவர்க்குமெட் டாத வியல்பின தாயதன் சொரூபத்
தவ்விய லனைத்து மெனக்குப தேசித் ருளின னவன்புரி நடமே.
மைவ்விழியெனதுள் விழையுமென் றுரைத்தான் மாதவன் மலர்மகள் வழங்கும்

நாதனே யெனைய னுதரித் தவனி நங்கையோ டங்கெழி னடன
மாதரக் காண்ட லெம்முறை யமைக வருளினி யென்னிடத் துளதே
னீதயை கூர்ந்தந் நடனம்யான் காணு நெறியினை யுரைத்தரு ளென்று
வோதலு முதுகேட் டலகெலா முதித்த வுந்தியா னுவட்கிவை யுரைக்கும். ()

அரியன வாகு மசாத்தியப் பொருளு மருந்தவஞ் சாத்திய மாக்கும்
வருணனற் சூனு பிருகுவுக் குரைத்த வாறிது கேண்மலர் மானே
யுரியவத் தவமோர் மூன்றவை மனம்வாக் குடம்பினு லுஞற்றுவ வாகுந்
தெரிவுறு மிவைதா மிலெளகிகஞ் சிறந்த தெய்விக மெனவிரு திறமாம் ()

இருவகை விரிக்கிற் றெய்விக மூன்றி லெளகிக மூன்றெென விசைப்ப
வரியலெள கிகந்தான் *பரார்த்தநிட் காம §மனசூயை யாதிமா னதமு
மருவித வசனஞ் சத்திய மாதி வாசிக மும்முப வாசங்
கருதுறு தீர்த்த சேவை ‡தானாதி காயிக மும்மென மூன்றே. (௪0)

எய்தியா னாதி மனஞ்செபா தியவாக் கியாகமுற் காயமிம் மூன்றுந்,தெய்விக
மாமி லெளகிகஞ் செய்தே தெய்விகம் பின்செயன் முறையாந், துய்யலெள
கிகத்தை யொழிந்துதெய் விகத்தைத் தொடங்கல்வே ரற்றிடு மரத்தின்,
பெய்கனிக் கிச்சை கொள்வது போலும் பின்னையீ துண்மையென் றுணர்தி

இப்பரி சுணர்ந்தா ரேவத வனத்தி லெய்திலெள கீகதெய் விகமாந்
திப்பிய தவங்க ளிரண்டுநீ யன்பிற் செய்கெனச் செங்கண்மா லுரைப்ப
வப்பொலங் கமலை சம்புசா நித்தி யந்தரு மேதுவா மவைநான் [றும்.
றப்பிலா தியற்றும் விதியருள் கென்று தாழ்ந்துமுன் னிறைஞ்ச மால் சாற்

* பரார்த்த நிட்காமம் - பிறர்பொருளின் விருப்பமின்மை.
§ அனசூயை - பொறாமையின்மை.
‡ தானாதி - தானமுதலியன,

வேறு.

வனைச கேண்மதி யிவ்விரு வகையுமெய் யன்பி
னனகன் வெள்ளியஞ் சைலத்தெம் மண்ணாரு ணினைந்தே
யினிது செய்திடத் தக்கதா மித்தகு வாய்மை
தனைம றந்தவர் தாமவற் றுறுபயன் சாரார். (௪௩)

பவள மெல்லிதழ்ப் பான்மொழிப் பைந்தொடி கேட்டி
யிவை யிரண்டொருங் கியற்றென முராரிமுன் னிசைத்தாங்
கவிர்ச ரோருகத் தமர்ந்திடு மனையவ ளவண்போய்த்
தவமி யற்றுதற் கமைவுறு வேடமுஞ் சாற்றும். (௪௪)

அவிந றுவுணு மலர்க்குழல் வேணிய தாக்கி
யொளிகொள் பூந்துகி லாமா வுரியினை யுடுத்து
வளரு மன்பொடு தரிப்பவர் பசுத்துவ மாற்றித்
தெளிவு றுஞ்சிவத் துவஞ்செய்வெண் ணீற்றைமெய் திகழ. (௪௫)

நிறையுத் தூளன மேதிரி புண்டர நெறியே
மறைமுற் கூறுசா பாலத்தின் வயங்குமைந் தாறென்
றறைம னுக்களா லணிந்துபின் சதவுருத் திரமந்
நெறியிற் கூறியப் பதந்தொறுந் தருப்பண நிகழ்த்தி. (௪௬)

பாத்தி யாசம னார்க்கிய மேநறும் படீரங்
கூர்த்த வக்கதை தூருவை கூவிள மிதழிச்
சீர்த்த மாமலர் முதலுப கரணங்கள் சேர்த்தி
யேத்து சத்தியோ சாதமா தியமனு வியம்பி. (௪௭)

ஆண்டு சீதளி நாதனை யருச்சனை யாற்றி
மாண்ட குஞ்சிவாக் கினிவளர்த் தமுதுநீ வார
மீண்டு பிப்பில மர்திய பொருள்களா னீற்றிற்
பூண்ட வாகம விதிமுறை யோமமும் புரிதி. (௪௮)

ஓது மன்பினர் வினைவெலா மொருங்கினி தருளு
மேத குந்திர லைந்தெழுத் தினைவிரை மலர்மேன்
மாது தாரக மசலைமா மாயைதன் பீசங்
கோதி லாதநின் பீசமுங் குலவு முன் சேர்த்தே. (௪௯)

மறைசொல் சம்புவைக் கிருட்டின பிங்கள வடிவி
னெறிம லர்க்குழ லுமையொரு பாகனு கினைந்தே
முறைகொ ணற்செபம் புரிகுதி முளரியஞ் சேக்கை
யிறைகொள் பொற்றொடிச் செங்கரத் திந்திரை யிவைநீ. (௫0)

யாமு ரைத்தவா றோர்ந்தினி தியற்றினீ றினையுங்
காமம் யாவையு முடிக்குவன் கண்ணுதற் கடவுள்
வாம மாதவ னென்றவண் மாதவ ணிதழி
நாம வல்லையின் வல்லைசெல் கென்றுரை நவின்றான். (௫௧)

வேறு.

என்றுமா லுரைத்த யாவையுங் கமலை யிருசெவி மடுத்துளத் துவகை
துன்றநே ரிறைஞ்சி விடைபெறீஇ யிதழித் தலந்தபேர் முளரியிற் புலங்கள்
வென்றுளோர் தமலன் புரிகடங் காண்பான் விரைதரு நிறையவா வுந்தச்
சென்றுசேர்ந் தினைய வனப்பிர திசைத் திகையிருகு ரோசத்திற் றிகழும்.

அகலி காரை நகர்தனிற் சயம்பு வாமருட் குறியினை யாம்பன்
முகவினைச் சண்டி சனிவிழி குளிர்ப்ப முன்னுறக் கண்டனண் முதமே
தகவுளத் தெழுமெய்யன் பினுடன்பூ தலமுறப் பணிந்துமுன் றுதித்தாள்
விகசித வருண வம்பயப் பொருட்டின் மேவிவீற் றிருந்தருள் விமலை.

காரையூர்ந் தவன்றனிளவண் மார்பகத்தாள் காரையூ ரதனிலோர் தடந்தன்
பேரையூர் தரக்கண் டதனிடை மூழ்கிப் பிறைமுடிக் கறைமிடற் றிறைவ
னுரையூர் பதத்திற் சிவாகம விதியா லருச்சனை யன்பினுற் புரிந்தாள்
வாரையூர் முலைபா கனுக்கத ஞற்சீ வந்திய நாதப்பேர் வாய்ந்த. (௫௪)

உரைத்த நூல்விதியா லரனடிப் பூசை யுஞற்றியக் கமலையாங் கிருப்ப
வரைத்தனுக் கோட்டிப் புரத்தெரி யூட்டி மந்தகா சந்தரும் வரன்மா
விரைத்தமர் போதின் மாதிரு காதுக் கின்னமு தொழுக்குவ தென்ன
நிறைத்தவம் புதஞ்சு ழம்பரத் துடம்பினிலவுரு மொழியிவை னிகழ்த்தும்

சித்தகல் யாண மங்கள ரூப நிலவுற வுலைவிலா துளத்திற்
பத்திமை யோடுநமையருச்சனை செய்பவளாய்ப் பதுமைநின் றனக்கீண்
டத்தரு பத்தி யென்றுமே லோங்க வகிலமும் பரவுறு மிதழிக்
கொத்தலர் வீபினத் திமகரர் குலம்பல் கோடிசூழ்ந் தொளிர்வது போல.

முதிரருட் சயம்பீ லிங்கமொன் றெமக்கு மூலமா யிலகுமத் தலனிற்
றிதலைவெம் முலைநீ சென்றுசேர்ந் தவணச் சிவக்குறி தனையருச் சனைநூல்
விதிமுறை புரிதி யென்னலும் வணங்கி விரைந்தன ளவ்வன மேவிக்
கதிதரு வியனீர்ச் சிதவி மேல்பாற் கவிழிணைக் குமைமூ லத்தூ. (௫௭)

இந்திர ஞாதி யெண்மரு மூலக மெட்டினின் ருங்ஙன மெய்திச்
சிந்திய வலியின் பெற்றுவாழ் வுறுவான் றிருந்திய வருச்சனை புரிய
முந்துநல் வரங்க ளளித்தது மேதை முனிவர ரருக்கரா தியர்செய்
தந்தபூ சனைகொண் டவரவர்க் குரிய தருவரம் பலவளித் ததுவும்.(௯அ)

ஆயதோர் சுயம்பு லிங்கமிக் கிலங்கி யணிமணிப் பிழம்பென வாங்கே
மேயவெண் டிசையுந் தனதொளிபரப்பி வீற்றிருந் தருள்வது கண்டாள்
சேயவா ரிசத்தி லிருந்துல களிக்குந் திருமக ளருகுசென் றமர்ந்து
பாயவன் பொடுமப் மாமனைப் பணிந்து பகர்சிவா கமவிதிப் படியே. ()

பூசனைக் குறியபொருளெலாந் தொகுத்தப் புராரிதன் றிருவடி மலர்க்கீழ்
மாசறு மினிய சபரியை புரிந்தாண் மனநெகிழ்ந் தரியன துதித்தா
ளாசறு கமலை யாங்குநின் றெருவா றகன்றுசீ தளிவட கரையிற்
றேசமிங் குறுநற் றவம்புரி கருத்தாற் சென்றுநின் றங்கிது செய்தாள்

கருபமித் தாங்கொன் றவனியிற் பதித்தாள்கார்முகந் தனையாங்குரித்துத்
தொகுபலகினைகொண்டெழுதருவாகித்துலங்குமாபெய்தனள்வளர்த்தத்
தகையபூ ருகமே யுடசமாக் கொண்டு தான்புரி தவக்கிட ருறுது
வகைசெயக் கருதி மலர்ந்தசெவ் வனச மலர்வரு தலைவியீ தாற்றும். ()

கவிர்புரை யதரத் தனையவன் முகுந்தன் கரத்தசெங் கரத்தசக் கரத்தை
யவனுற நினைத்தா ளஃதுணர்ந் தாழி யத்தடத் தகன்றிசை மேல்பாற்
குவலைய நேமி தீர்த்தமென் றுரைப்பக் குளித்தெழுந் தலர்மகட்குறுகிப்
புவிதொழு மடிக்கீழிறைஞ்சிமுன் னிற்பப் பூவையத்திகிரியை நோக்கா.

பரிதியைப் பழிக்கும் பரிதியிப் படிநாம் பயிறவ மாவணம் பரிக்கென்
றரிதவ ணிறுவி நோற்றமர் காலை யற்புத மொன்றவட் கண்டாள்
வருமதன் வரலா றுரைக்குவங் கேண்மின் மாதவத் தீரொரு சேன
மருமலர் செறிசீ தளியுறு மீன்முன் வாயினுற் கவர்ந்துண வீழ்ந்து.(௬௩

ஓய்யென மீனொன் றெடுத்துவிண் ணேக வுறுகய னழுவுற வுடன்வீழ்ந்
துய்யுநீ ருடல நனைவுறப் பெற்றவ் வுருவமே திவ்விய வுருவாச்
செய்யபொன் னிறமுநேத்திரமூன்றுந்திகழ்புலித்தோல்விளங்குடையுங்
கையினை லயய வச்சிர சூல கந்தர கந்தரக் கவினும். (௬௪)

பணியணி வேணி மதிநதி யாதி பலவுமுற் றிலகுறு மீச
னணியசா ரூபம் பெற்றவா நோக்கி யாரைநீ யென்னவப் புருட
னிணையிலங்கீர்தோய்கலத்தின் முக்கால*மெய்திறனெய்தலினிசைப்பான்
மணமலர்த்திருவே மாளவ தேய மன்னன்யான் மணிப்பிர காசன்.(௬௫

---

* எய்தல்—அறிதல்.

தரணியிற் றரணி குலத்தில்வந் தரனைச் சபரியை முப்பொழு தாற்றி
யரசுரி நீதி வழுவிலா தியற்றி யறநெறிப் பொருண்மிக வீட்டி
யுரியவெண் கவிகை நீழலி னுலக மொருங் [illegible]
புரவிதேர் பதாதி யளவில [illegible] துவிசயந் தரித்தேன்.

அளவிலாச் செல்வப் பெருக்கினாற் செருக்குற் றரித்தவி சமருமக்காலை
வளரொளிச் சடையும் புலியத ளுடையு மலர்க்கர [illegible]ழும் மயங்க
வினையருந் தவஞ்செய் மிருகண்டு முனிவன் மெய்ம்பசி பம்பமெய் வாடிக்
களையகற் றுணவு விழைந்துநண் பகலிற் கடிதென தருகுவந் தடுத்தான்.

ஈசனை யாக வழிபடற் பால ரீசன்மெய் யடியரென் றெண்ணு
வாசுசே ருளத்தா ரன்றியு மிகழ்வக ருய்ப்பசி யுற்றடைந் தவரை
நேசமோடணைப்போம்பொழுதினுமழையார் நிறையுறத்தாந்தனி யுண்பார்
நீசரின்னவர்தீநரகினெஞ்ஞான்று நிலைப்பரென் றறிந்துவைத்திருந்தும்.

போகவூழ் வலியா லவனடி பணிந்து போற்றிடா திருந்தன னதனைத்
தீகவூழ் சாபம் வல்லனே யாயுந் திருவளத் தடைத்திடா திருந்தா
னுகொடும் பதக னுயநான் றனிச்சார்ந் தயின்றபின் வருந்துய ரறியா
தேகியம் முனிமுன்வருதலுமிருகண்ணெரியுகக் கொந்தித்தெனைநோக்கி

அரசநீ*யாச னகலின் னமலி யாயினுந் தலைபணித் தகன்றுங்
கொருவுறும்வாந்தியனமெனவெமர்நீத்தொழித்தனர்பழித்தவிச்செல்வம்
பெருமித வாழ்வென் றதனையே யிறுகப் பேணுபு நித்தியப் பொருளாக்
கருதினையனைய செருக்கினாற் பசித்தன்கடைத்தலை யணுகியநமையும்.

வழிபடல்புரியாதொருதனிப்புகுந்தூண்மடுத்தெதிர்புகுந்தனைமடவோய்
பழிபித னனீ பருந்துருக் கொண்டு பசிக்கன றகிப்பவெங் மகங்கு
முழலுபு திரிகென் றுறுவர்கோன் சபிப்ப வுளநடு நடுங்கியவ் வுரவோன்
கழலடிதனில்வீழ்ந்தெந்தையெம்பெருமகடையனேன்பிழைபெரிதேனும்

ஐயநின் கருணை யதனினும் பெரிதா லப்பிழை தன்னையுள் ளடக்கித்
துய்யவக் கருணை மேற்படன் முறையே சொல்வதி யாதினி நாயே
னுய்யுமாறருள்கென் றுடன்பலதுதித்தவ்வுறுவர்கோனடிக்கிடந்தினந்தே
னையுறேலரசவெழுகவென் றுரைத்தானவைபினேனதுவினுவெழுந்தேன்

அஞ்சலி கரமென் சிரமுறநின்றே னறவர்கோனெதிரவ னெனைப்பார்த்
தெஞ்சலி லருளான் மன்னகேண் முன்னா ளெறுழ்வலியசுரருஞ்சுரரும்
விஞ்சுபோர் புரிகாற்சுரருடைந் தகல்பால்வீரையின் முராரியையடைந்து
தஞ்செயலுரைத்தாங்கினைவுறவனையான்றுனவர்தமையெதிர்ந்தடர்த்தான்

---

* அ-இன்மைப்பொருட்டு.

அரியிகன் றசுரர் யாரையுந் துமிப்ப வஞ்சபு சிலருடைந் தோடி
மருவல ரிதழி வனத்திற் றங் குரவன் மந்திரி தந்தையாம் வரஞ்சால்
பிருகுவி னுடைசத் தொளித்தன ரிருப்பப் பின்றொடர்ந் தாய்குறு மாலப்
பெருமுனி யாங்கண் முன்னரே புகுதற் பிரிந்தமை தெரிந்துழை புகுந்தான்

வேறு.

புகுதலு முனிவன் பன்னி புகலுற்றார் தமைத்தம் மாவி
யுகுமிடர் வரினு மோம்ப லுத்தமர் மாபென் றோதுந்
தகுதியி னுறைத்து நின்று ளாதலிற் றகைய மாலை
யிகலின்முத் தொழின டாத்து மிறைவரு ளொருவ னையும். (எரு)

திதித்தொழி றனதே யாயு மூழ்வினைத் திறத்தி னானே
விதத்தசத் துவகு ணந்தன் றொழிற்கலா தியல்பிற் சாரா
விதத்தினோ கடலி னூடுந் துயிலுதல் கரிய மேனி
வதத்தொழின் முதலி யற்கைத் தமகுண மருவ லானே. (எசு)

அனையமா றகையு நாரி யறவர்கோன் சுபன்னி யொன்றோ
வினையறு சூலியாக விரங்குவ தறிந்து மந்தோ
கனலெழ வாழி யோச்சிக் கற்புடை யவளைக் கொன்றான்
பிணைவுறு மசுரர்க் கொன்றான் பெயர்ந்துடன் விரைந்து சென்றான்.

அந்தின்மா லேய பின்ன ரருந்தவப் பிருகு வாங்கு
வந்தன னிகழ்ந்த தோரரன் மனைவிதா னவர்கண் மாட்சி
சிந்தைவெந் துயரின் மூழ்கத் தெரிந்திட ருழந்திச் செய்கை
யெந்தவெம்பதக ரானி கழ்ந்ததென் றுளத்தி னெண்ணி. (எஅ)

மாலெனும் பெயரை வாய்ந்து மயக்கமே யியற்கையாக் கொண்
டாலுறும் வஞ்ச னேயிக் கொலைஞனென் றகந்துணிந்து
சாலும்வெங் கோப சாபந் தந்தன னனந்த யோனி
மேலவா விலாப்பி றந்தை மேவிமா றுயர்க வென்று. (எகூ)

அரிகரத் தமர்ந்த செங்கே ழரிகறை தோயு மாழி
விரிகறை யுறுக வென்று விரிகறை மேலோன் கூறும்
பரிகர மிலாத சாபம் பரிகர வளையை மாலை
யெரிசுடத் தொடர்ந் தலைப்ப வெரிசுடர் மணிகொண் மார்பன். (அo)

கதிதரு காஞ்சி மாந கரத்தடைந் தமலன் றனை
விதிமுறை நமர்ந்து வந்த வினைவைவிண் ணப்பஞ் செய்து
துதிபல கூறி வேண்டத் துவரிதழ்க் கௌரி கொங்கை
பதிவுறக் குழைந்த மேனிப் பரமனங் கருளிக் கூறும். (அக)

சாபத்தை நினைந்தினைந்து தளர்வுறு முகுந்த கேட்டி
யாபத்தை யகற்றி யின்பே யருள்கொன்றை யடவிசேரிப்
பாபத்தைத் தணிவித் தன்பாற் படர்தரு படரைத் தீர்க்குஞ்
சோபத்தை யொழிதி போதி யென்றனன் சுருதி நாதன். (அஉ)

அம்மொழி வினவி மாயோ னவ்வனத் தணித்தி னேகிச்
செம்மைசெ யீச னுசைச் சிவபுரத் தமலன் றன்னைக்
கைம்மலர் தூவிப் பூசை காலங்க டோறுஞ் செய்தே
யிம்முறை வருட மொன்றாங் கியல்புற நோற்றி ருந்தான். (அங)

தவமுவந் தமல னங்குச் சார்ந்தெதிர் சலசை கேள்வ
விவணடைந் தெம்மைப் பூசை யியற்றுதி யென்கொ லென்ன
வவனடியிறைஞ்சி மாயோன் விளைவெலா மடைய வோதி
யெவமுறு சாப மோசித் தெந்தையெற் புரத்தி யென்றான். (அச)

மாதவ னுரைப்ப வெம்மான் வருதிமா லெமக்கன் போரம்
மாதவப் பெரிய ரற்றால் வருந்துயர் புரிந்த வந்த
மாதவன் றன்னு லன்றி மாற்றொணு தெம்மா லென்று
மாதவ ழிதழி வேணி பிருகுவை மனஞ்செய் தானல். (அரு)

சிவபுரத் தமல னுள்ளஞ் செய்தலு மனத்திற் போந்து
தவநிறை பிருகு வெம்மான் சரண்முடிக் கொண்டு தாழ்ந்து
பவனெதிர் துதிய னேகம் பரவியொன் றினுக்கும் பற்று
வவலனேன் றனையு மிங்கோர் பொருளென வகத்துட் கொண்டோய்.

இந்திர னயன்மா லாதி யிமையவர் முனிவ ரேனோர்
புந்தியின் வழிபா டாற்றிப் போற்றுபு சூழ்ந்து நிற்ப
வெந்தைநீ யாது மோரா வேழையாஞ் சிறிய னேனைச்
சிந்தைசெய் தருளிற் றென்கோ றெரித்தருள் பெரும வென்றான். அஎ

திறவில் பிருகு மாற்றந் திருச்செவி மடுத்து முக்கட்
பிறைமுடிக் கறைமி டற்றெம் பிரானருள் பெருக நோக்கி
யறனிறை பொறை முன்னாய் வருந்தவத் தங்க மெல்லா
நிறைவுறு முனிவ கேட்டி நீளோதன் கேள்வ னின்பால். (அஅ)

ஆற்றிய தீமை யம்ம வறைவதன் றதுகு றித்துச்
சாற்றிய சாப மேற்கத் தக்கதே யெனினு நம்மைப்
போற்றிய தொழின்மேற் கொண்டோன் புரப்பவன் புன்கண் ணுற்றாற்
பாற்றிய வருளல் யாவர் பாலதெங் கடமை யன்றே. (அக)

அன்றியு மிவண டைந்தே வருடமொன் றளவு நம்மைப்
பொன்றுரு வன்பி னோடு பூசிக்கு நியமம் பூண்டான்
நன்றுல களிப்பா னின்றே லகிலமு நலத்தி னீங்கி
வன்றுயர் பலவுட் பட்டு வருந்துறு மாத லாலே. (௯௦)

வேறு.

பவவினை புரிந்து வருந்துமால் சாபம் பாறுமோர் பரிசுரை யெனவப்
பவனருள் சிரமேற் கொடுமுனி யுரைக்கும் பங்கயக் கண்ணநீ யளவில்
பவமென லகன்றீ ரைந்துமட் டடைந்தப் பவங்களுட் டசரதன் மகவாம்
பவமதின் மனையை யிழந்துசின் ஞளிப் பாரினிற் கானிடைப் பயில்க.

சக்கிர நீயா தவகுலத் துதிக்குஞ் சனனத்தோர் முகூர்த்தமா மளவு
மிக்கபேரொளிபோய்க்கறையுருவடைந்துவிளம்பியசாபமேற்றெழுகென்
றக்கட வுண்மா முனிசெல வான்று ளரிபணிந் தமலனை யடியேன்
புக்குறைதருமப்பிறப்பிடைமயங்காப் போதமீந்தருள்கெனப்புகன்றான்.

திருமறு மார்பன் பணிந்துரை வாய்மை திருச்செவி மடுத்தா னருளு
மரிநின தொருபான் பிறப்பினு ளொன்றே யனுக்கிர கம்பெறற் கமைவ
துரியநிக் கிரகம் பெறுவமற் றைந்து முவற்றினு மீற்றினி லருள்வோம்
பரிவுறேல் விழைந்தவாறுமெய்ஞ் ஞானம்பாலித்துன்பதம்புகவளித்தும்.

எனவரா னுரைப்ப விறைஞ்சிமா லகன்று னிவ்வரி பூசனை செயலா
லனகவப் பதிபி னரிபுர மெனும்போத் தாயதப் புரத்தினி யாச
முனமுறைத்தாங்குச் சேனமாயடைந்தம் முன்னவன் றன்னைமெய் யன்பாற்
றினமுமர்ச் சனையி ரைம்பஃ தாண்டு செய்தவ னினிதமர்ந் திருப்பாய்.

இன்னண மாங்க ணமர்ந்திடு காலை யிரும்பசி யுடற்றநொந் தொருநாண்
மன்னுபொன் னிதழிவனத்தினிற் றிருப்பேர் வாவியின் மீன்கவர்ந்துண்பான்
முன்னுபு பறந்தம் முயற்சியா லுடல மூழ்குறப் பெற்றதன் பயனு
னின்னையான் முனிந்து புகன்றவிச் சாப நீங்குறப் பெறுதி யான்மேலும்.

செப்பருஞ் சிவசா ரூபமும் பெறுதி சேறியென் றுரைத்தனன் றிருவே
யப்பெரு முனிவ னருளிய வாறே யடைந்தனன் பருந்துரு வதனைத்
தப்புறு தனைய வரிபுரஞ் சார்ந்து தாணுவை யருச்சனை நாளுந்
துப்புற வியற்றி வழிபடீஇ யாங்கட் டேயநன் மனத்தொடு மமர்ந்தேன்.

அப்பதிக் கிறையான்பணிந்தது ணுற்சேனே சனெனன் றொருபெயரடுத்தா
னெப்புராத் திருவே சார்ந்ததன் வண்மா யுயிருறல் புதிய
விப்பருந் துருவை யடுத்தயான் பசிநோ யீர்ப்பவந் திக்கயற்
றுய்புணு வாகச் சலசரம் விழைந்து தோய்ந்தனன் வாய்ந்ததிப் படிவம்.

காழுயர் தவத்தோன் றனையிகழ் பதகன் கயலுணக் கருதுமா கொலைஞ
னூழிய நிரயக் குரியனே யாயு மரனருட் டிருவுரு வடைந்தே
னூழினும் வலிய யாவுள வேறொன் றுறவரு மேனுமவ் வூழ்முன்
சூழுபுந் தன்பயனையேயென நூல்சொற்றதுவெளிப்படத்துணிந்தேன்

என்றுமா லகலத் தடத்தமர் சலசை யின்புற முன்புகன் றாங்கு
நின்றவா விமான மேலிவர்ந் துரிய நிகரிலாச் சிவபுரம் புகுந்து
மன்றவாழ்ந் திருந்தான் யணிப்பிர காச மன்னவ னின்னதுவனசை
நன்றுணர்ந் தினைய தீர்த்தமே யாவு நல்குவ துடனெளி தென்பாள். ()

சீதளி யதனுத் தரதடத் தனதன் றிசைக்கரு கடுத்தகீழ் பாலி
னுதாம் பெருக மரபினின் மூழ்கி யருக்கிய முதனிய மஞ்செய்
தேதமி லதன்பே ரிலக்குமி தீர்த்த மெனப்புகன் றியாமிய திசையிற்
போதுபு கௌரி பூசனைக் குவகை புரிகௌ ரீசன்முன் புகுந்தாள். (

அன்புளஞ் செலுத்த வடுத்தன னல்கி னருட்குறி யாவைக்கு மூல
மென்பதுதோற்றுந்திருவுருப்பொலிவுமிலங்கொளியினங்களெல்லாந்தன்
முன்பொடுங் குறநீ ளொளிப்பிழம் பாகு மூலமுங் கோலமுங் கண்டா
டன்பா மிழந்தாள் சிவவச மானு டரையின்முன் வீழ்ந்தனள் சலசை.

பின்னொரு வாறுங் கெழுந்தனண் மீட்டும் பிரானடி முடியுறப்பெருகன்
பின்னனி போற்றிப் பன்னுமஃ றுதிக ளியம்பியங் கரிதக ன்றேகி
மன்னிசிற்சபையெம்பிரானை முன்பணிந்துவந்துகாற்றிசையிலத்தளியு
முன்னருச் சனை-யான் புரிதரு மிலிங்க மூர்த்திதன் சேவடிபணிந்தாள்.

அனந்தர மனைய விலிங்கத்தின் வடபா லத்தளி யுள்ளினி தமர்ந்து
கனந்தரு குழவி புடவிமா துடனுய்க் கலந்துவீற் றிருந்தருண்முகுந்தன்
வனந்தரு கழற்கால் வணங்கினள் பிருகு மாதவற் கண்டுள மகிழ்ந்தாண்
முனந்தருமாயன்வாய்மையைநினைந்தம்முதல்வனதாணையின்முயல்வாள்.

சீதளி யானை மாதவன் முன்னுட் செப்பிய விருமுறை சிந்தித்
தோதுறும் விதிகள் யாவையுந் திகழ வுழுவலன் புளத்திடை நிகழ
மாதவ லரிய வுபகா ணங்கண் மலிவுற வீட்டுபு வாய்மைப்
போதமொ டரிய நூன்முறை நாடிப்பூசனை புரிந்தனளனும். (௧௦௪)

நாடொறும் பூசை புரிந்தனந் தரந்தன் னைதனுண் டுரைத்தவா நயந்து
பீடுறு திருவைந் தெழுத்தையு முளத்தாற் பேணுநற் செபம்புரிந் தீற்றி
லாடுறு சிவாங்கி வ்திவழி யியற்றி யாண்டுமுந் நூறுநோற் றமர்ந்தா
டேடுமெம் பெருமா னுவந்துபங் குனியுத் திரம்புகர் வாரமுஞ் சேர்ந்த.

—யான்என்றது அகஸ்தியமுனிவர்.

கற்றினத் திடப மீதுமை யோடு நான்முக ஞதிவா னவரை
புற்றிடு சனக ஞதிவே தியர்யா ழோதிடு மிருவர்நற் கணங்கள் [யப்
சுற்றிட வெழுந்து தோன்றினன் கமலை தொழுதுளத் தானந்தம் விளை
பெற்றுநன் மிடறு விம்மவன் புருவாய்ப் பிஞ்ஞகன் றுண்மலர் துதிப்
பான்.

வேறு.

வேத மலர்கா யத்திரியின் விளங்கு பொருளீ யேயென்ப
வீது தெளிய நின்றுமைத் திடையே யிலகும் பற்கநம
போத னரிமே லாஞகப் புகலு நாம வியாசத்தா
லோது தொழின்மூன் றுஞற்றியுமே லுஞற்று தொளிரு மொருவுநம.

மலரோன் முதற்கீ டாந்தமென வருதா பரசங் கமரூப
வுலகி லுபாதி பேதத்தா லுணரார்க் கனேக ரூபநம
நிலவும் வலிசேர் தத்துவத்தி னிறைநோக் குடையார்க் கேகநம
நலஞர் கௌரி நிருத்தநம நதியார் மதியார் மௌலிநம. (கo௯)

சுரர்க ளுதிகொ ளரிவநம துலங்கு முருத்தி ரேசநம
கரிய கால காலநம கவின்கொ ணீல கண்டநம
புரமுத் திறத்த வயிரிநம பொன்ஞர் சைல வில்லிநம
வரிதன ஞெருபா லழகநம வனல நுதற்க ணனகநம. (கoக)

புருட பாவங் கடந்தமையாற் புகலவ வியத்த ஞகின்றாய்
புருட ஞக்கொள் புத்தியினுற் பொருவி லேக ஞகின்று
மிருமை பெறுதி பெண்மையினு லினைய னெனவோர் வரியநம
திரியம் பகமுக் குணாதீத சித தளீச சிவாயநம. (கக0)

என்று துதிக்குஞ் சலசைமுக மினிது நோக்கி யெம்பெருமான்
மன்றல் கமழு மலர்த்திருவே வருதி யுனது துதிமகிழ்ந்தே
மொன்று முணர்வி னமைப்பூசை யுஞற்றி நோற்ற தெதுகருதி
யுன்றன் வேட்கை யாதுரைத்தி யருள்வோ மென்று னுமைநாதன். ()

அந்தண் கமலத் தனிக்கோயி லரசி யதிகேட் டுவந்துரைப்பா
ளெந்தை யெமது யெருமானே யெமையா ளுமையாள் பொருட்டொரு
மூன்று புரிந்த திருநடன முறையி னீண்டென் பொருட்டினிது
வுந்து புதிதி னியற்றுறயான் காண்யான் விழைய மனமென்றாள் (ககஉ)

கமலை யுரைத்த வுருவினவிக் கருணை பொழியுந் திருவதனத்
தமல னினைத்த வுடனெவையு மன்பர்க் கருளு மருதொழிலோன்
விமல மனத்த திருவிரும்பி வேண்ட வருளா தொழியுங்கொன
முமல மகற்றி யெமையளிக்கு மூனைவ னதுவே புரிகின்றான். (௧௧௩)

தெக்கி ணுபி முகத்தமர்வேற் செங்கைக் குமரன் றிருநந்தி
மிகக போத னரியவனி விபுதர் குலங்க ளிருடிகுழா
நெக்குள் ளுருகு மனந்தன்முத லுக ரெனையோர் நெருங்கமறை
யொக்க முழங்க வப்பரன்முன புகுற்று நடத்தி னும்புதிதாய். (௧௧௪)

ஓத வரிதா யுணர்வரிதா யுன்ன வரிதா மன்னடமே
நாத முழங்க வியங்கள்பல நலத்த குரலின் விரலுளர்யாழ்க்
கீத முழங்க மிடற்றிசையுங் கிளர்ந்து முழங்க வொருநான்கு
வேத முழங்க வன்பர்துதி விம்மி முழங்க வெம்மிறைவன். (௧௧௫)

வேறு.

அருந்தவம் புரிந்த வனந்தன்மா முடிக்கோ ரணிகல னுயபொற் பதமும்
வருந்திறன் முயல கன்புறத் தூன்று மலருமீ ரைந்துசெங் கரமுந்
திருந்தொளி முகமண் டலமும்புன் னகையுந் தேவசா லந்தெறு கூற்றுந்
திருந்தொளிர் நீல கண்டமுங் கண்டத் திலங்குபொற் கலங்களி னெழி
லும்.

கொன்றைசெஞ் சடையிற் சூழ்ந்தொளிர் வனப்புங் குலவிளம் பிறை
யொளிர் வனப்பும், பொலன்றனி மேரு வருவியின் மார்பிற் புரளுமுந்
நூலொளிர் வனப்பும், வென்றிவெண் ணீறு பரந்தசெம் பவள மேனியி
னொளிகொளி வனப்பும்,மன்றலங்குழல்வெற் பணைபா ணோக்கி மகிழ்
வுறுங் கடைக்கணின வனப்பும். (௧௧௭)

இன்னன பலவு மெண்டிசை களினு மிலங்குறத் திருநடம் புரிந்தான்
முன்னர்நின் றிருகண் களிப்புறக் காணு முளரியங் கொடியுள முருகத்
தன்னிரு கரங்கள் சிரமிசைக் குவியத் தரையுறப் பலமுறை யிறைஞ்சித்
துன்னிரு கண்க ணீர்மழை பொழியத் தொழுதுநின் றிவ்வரம் வேண்
டும்.

தேவநா யகனே யுமைபொருட் டன்றுட் செய்க்கட மென்பொருட் டிக்
யாவருங் காண நவமுற வியற்றி யென்குறை முடித்தனை யிதனுள்[நான்
மூவுல கிறைஞ்சு மிப்பெருந் தலத்தை முதலிலென் பெயர்கொளவருளா
யாவரும் பெருமகுமைதிரு மணாள வடியனே னருச்சனை யாற்றும். ()

நினைதரு ஞருவாய் மூலமா யிலகி நிலையுறு மினையமா லிலிங்கந்
தனையுநா னேற்றங் கமர்தடத் தினையுந் தமியனேன் பெயர்முதற் சார்வா
னினிதருள் புரிதி யிவையொழிந் துலகி னிலகுறு முயர்பொரு ளெவற்
[றும்
வினைதெறு பரம வென்பெயர் முதலின் மேவிய வருடியால் விமல. ()

அன்றியு மென்றா யித்தட நாப்ப ணன்பொடுன் பூசனைத் தொழிலே
யென்றுநான் புரிந்தாங் கிருந்திடு மாறு மினிதருள் புரிகெனப் பணியத்
துன்றிய கருணை நோக்களித் தளிசூழ் சுரிகுழல் வரிவிழித் தொடிக்கை
மின்றரு நுசுப்பி னணங்குரைத் தாங்கு மேவுகென் றருளியவ் விமலன்.

கமலைகே ணின்னு லருச்சனை புரிந்து கருதியேத் திடப்பெறு நமைநீ
யமலமா கௌரி தாண்டவ மூர்த்தி யாகவே சந்தத நினைந்து
விமலையா யமர்தி யெமதுபொன் வேணி மேவுமா கங்கையா னிறைந்து
நிமலமுற் றுளதுங் கௌரியாற் பாசா னிருமிக்கப் பெற்றசீர்த் தியதும்.

அரிவைநீ யெமையாங் கருச்சனை புரிந்தே யமர்வது மாயவத் தடத்திற்
புரிவொடு முழ்கி நமையும்வந் திறைஞ்சும் புண்ணிய னெவனவன் றனக்
[கும்
பரிவினன் மோக்க மளிக்குது மென்னாப் பகர்ந்துமா சகிதனு யாங்கே
விரிமலர்த் தவிசிற் றெரியிழை பரவ வீற்றிருந் தருளினன் மாதோ. ()

பின்புமக் கமலை யான்புது நடனப் பெருந்திருக் கோலத்தின் பொலிவை
யென்புநெக் குருகக் கண்டுகொண் டுள்ளத் திடையறா வானந்தம் பெருக
வன்புரு வாகி நாத்தழு தழுப்ப வகத்தடங் காதெழுந் தாங்கு
முன்புநின் றரிய வாக்கிய வகையான் முன்னவன் றன்னையேத் தெடுப்
[பான்.

ஆதியு நடுவு மந்தமுங் கடந்தோ னனாதியன் சனாதனன் விசால
மேதகு பவஞ்ச ரூபகன் பரனவ் வியயனே விபுபல கோடி
யாதவர் மதிக னங்கிகாந் தியனல் லடியவர் மனோரதம் யாவுந்
தீதற வருளு மருட்பெருங் கடலெஞ் சிதளி நாதனுன் போற்றி. ()

வஞ்சுசெறி யுலக சிருட்டிமுன் னாக வயங்குமுக் கிருத்தியம் புரிவோன்
விரிஞ்சன்மா தவனே ருத்திர வடிவன் வியத்தகு முக்குண நீதன்
சுராஞ்சன விசால பலபுரு டார்த்தந் துதிப்பவர்க் கருளருட் டேய்மைத்
திரஞ்செயு முருவன் பாவநா சகனெஞ் சிதளி நாதனுன் போற்றி. ()

அனந்தவெம் பூத சங்கநா யகனல் லருணிதி சனந்தன னாதி
யனந்தமா யோக முனிகுல பூசி தாங்கிரி பங்கய னரஞ்சே
ரனந்தமா மகுட பூடண மாக வம்புயாங் கிரிதரித் தருள்வோ
னினந்தொழு மனந்த நாமரூ பகனெஞ் சீதளி நாதனற்றாள் போற்றி. ()

வெங்கதிர்த் தாணி யங்கிதன் சோம விலோசனத் திரையன்மின் புரையு
மங்கதிர் வேணிக் கங்கையிந் தணிந்தே தா னரையினி லுரகருத் திரன்றான்
பொங்குசார்த் தூல சருமவம் பரன்றாள் போற்றுநர்ப் புரக்குமங் கண்
[ணன்
றிங்களொன் றென்றும் வலஞ்செலுஞ் சிகரச் சீதளிநாதன்றாள்போற்றி.

சுகந்தமா லதிமுன் னாமலர் வேதந் துதிதிரி சுபன்னமுன் னணிந்து
திகந்தமா மணங்கூர் சுசந்தன படீரந் திமிர்ந்தர தனந்தரு ளாதி
யுகந்தபூ டணகந் தாத்தொடு மெளியேற் கோங்குமா சிற்சபா பதியாய்ச்
செகந்தனி வீடு பேறுற நடஞ்செய் சீதளி நாதன்றாள் போற்றி. (௧௨௯)

இன்னிசை மிருதங் காதிதா ளங்க ளியைந்தசங் கீதங்கள் யாவுந்
துன்னுசா மியமாந் தாண்டவப் பிரியன் றுலங்குமா மறைச்சிலம் பாற்
பொன்னட வாமகுஞ்சித பாதன்புயங்கபூ டணனரி போதன் [றும்
சென்னிதாழ்ந் திருபாற் றுதிசெயுந் தலைமைச் சீதளி நாதன்றாள்
போற்றி. (௧௩௦)

உமைகராம் புயத்தா லுவந்துசெய் பூசைக் குளமகிழ பவன்புவி முராரி
யமரர்கண் முனிவருலகபா லகர்க ளனந்தன்முன் னவர்தொழு மமல
னிமமலை யுதவு நிமலைதன் னாத னேத்துநர் காமியப் பிரதன்
றிமினிமி ரிடப மூர்ந்தருள் பரமன் சீதளி நாதன்றாள்போற்றி. (௧௩௧)

புரந்தரா னாதி யமரச மூக பூசித பாதவம் புயன்றாங்
கரந்தராம் பனலா னிலாம்பரேந் திரவி யான்மக வட்டமூர்த் தியன்பூ
வரந்தரு பிருகு வருச்சனைக் குவந்தோன் வரனரன் புராந்தகன் மறலி
திரந்தரு முரத்தி னேச்சுபங் கயனெஞ் சீதளி நாதன்றாள் போற்றி. ()

என்றுபன் மொழியாற் றோத்திரம் புரிந்தாங் கிலக்குமி யிதயமீ துவகை
துன்றுறக் கசிந்து கண்மழை பொழிந்து துணைக்காஞ்சிரமிசைக்குவிந்து
நின்றிட வானைத் திகழ்பராற் பரனை நிகழ்சபா நடனநா யகனை [றிவாள்
முன்றனி யிறைஞ்சி யெழுந்துநின் றகில முதல்வனைப் பார்த்திது மொ

* சாமியம் - சமானத்துவம்.

அமரநா யகனை யிட்டுதற் கரிய வமலை போர்த் தாண்டவ மளியேன்
றமமற விருகண் களிப்புறக் கண்டேன் றன்மசா பல்லிய மூற்றேன்
பமரமா துரிய மதுரகர்ந் திசைகள் பாடியிச் சீதளி நாப்பண்[ரைத்தான்
விமலநீ யுரைத்தாங் கென்றுகிற் றெழுதே விழைந்தமர்ந் திடுவலென் று

அம்மொழி வினைய வமலனுங் கமலை யானன நோக்கியீ தறைவான்[டோ
செம்மலர்த் திருநீ புகன்றவித் தூதியைச் சிந்தித்தோ ருரைத்தவர் கேட்
ரிம்மையி னினைத்த விட்டகா மியங்கள் யாவையும் பெற்றுவாழ்ந் தேனை
யம்மையின் மோக்க மடைகுவ ரைய மன்றிது திண்ணமென் றறைந்
தான். (கடுஎ)

இவ்வகை யருளு மீசவாக் கியங்க ளிலக்குமி வினையுள மகிழ்ந்தச்
செவ்விய விதழிக் கானன மொருவான் சீதளி நாப்பணீற் றிருந்தா[ந்
ளவ்வணி யிழைபூ சனைபுரிந் ததற்பின் னமலனைத் தலத்தையத் தடத்தை
திவ்விய நாமஞ் சீதளி நாதன் சீதலஞ் சீதளி யென்ப. (கடுஅ)

எத்தகு பொருளு மத்திரு முன்னு விளைந்தன சீதளி யெனவு
மத்தடத்தீசா னொருதா தடத்தி னவிர்தரு மருச்சுன விருக்கங் [ஞ்சார்
கொத்தல ரலங்கற் குழற்றிரு வென்றுங் குறித்தமர் வெறித்தவம் புய
நத்துல வனைய சீதளி யமோக நளினியென் பெயரையு நணுகும்.(கடுகூ)

பொன்மகள் காணப் புதுநடஞ்செயுமப் புராதன நகரியின் புத்தூ[மீசன்
றென்னவும் யாண்டும் வழங்கிடப் பெற்ற தியார்க்குமூன னவனெறு
பின்னரா மயன்மான் முதலினோ ரிறந்து மிறந்திடாப் பெற்றிய னுகி
மன்னிநின் றிளமை புதியவ னுக வயங்குதல் போன்மென மாதோ. ()

வேறு.

[யோன்
செங்கமலத் திருக்கோயில் வீற்றிருக்குஞ் சேயிழையச் செங்கண் மா
றங்குதிருப் பாற்கடலின் முன்புநடந் தரிசித்த தகைமை யுள்ளத்
தங்கணுற வெழுந்திருகை சிரங்கூப்பு மஞ்சலிபார்த் தவன்பா லந்தத்
துங்கநெறி வினவியிரு வகைவிதிகேட் டுள்ளன்பு தூண்ட லாலே. ()

செவ்விதழி வனஞ்சார்ந்து பிருகுமுனி தனைக்கண்டு சிவனைப் பூசை
யெவ்வமக லுறப்புரிந்து கெளரிதாண் டவந்தரிசித் திறைஞ்சி யந்த
நவ்விமறி திகழங்கை நாதனருள் பெற்றுடனெஞ் ஞான்றுந் தூய
பௌவநிகர் சீதளியி னிடையிருப்ப வரம்பெற்றப் படியே வாழும். ()

திருத்தலமு மத்தகைய தீர்த்தமுமா ங்கருளே செய்தெம் முன்னந்
திருத்தமல னருளுருவா யமர்மூல வருட்குறியுந் திகழும் மூன்றுந்
திருத்தகுபல் புராணமிதி காசமுதல் யாவுமுணர் சிந்தை யான்மு
திருத்தமர்சர் வோத்தமமென் றங்கையெடுத் தனலேந்திச் செப்புவாரால்

பவித்திரமாய்க் கமலைசெந்நாப் பவித்ததுதி யட்டகமப் பரன்கை நாக
பவித்திரன்முன் றுதிப்போரப்பரனருளாற்றிருநோக்காற்புல்குசெல்வம்
பவித்திரப்போர்க் களித்தினிய மகப்பேறுமுதற்பேறுபடைத்துமேலுற்
பவித்திரங்கு படர்நீத்துப் பரமசிவ பதநிழலிற் பயின்று வாழ்வார். (௧௭௪)

என்றமல யத்தமரு மெந்தைகுறு முனியியம்ப வினிது கேட்ட
துன்றுமுனி வரரெந்தாய் தூயபரன் மாடனைத் துகடீர்ந் தின்ப
மொன்றுறநீ புகன்றனைகேட் டெலடுத்த பயன்யாவு முற்றே மந்த
வென்றிவடு கேசனருட் காதையினி விளம்புகென விரிக்க லுற்றான்.

இலக்குமிதாண்டவச் சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ௪௧.

---

## வைரவச் சருக்கம்.

---

சிந்தை யன்புறு மந்தணீ
ரிந்தி ரைந்நட மியம்பினு
முந்து சீர்வடு கன்கதை
புந்தி யாதரப் புகலுவாம்.

வேறு

முன்னொருகற் பாரம்பத் திரவி யிந்து முகிழ்க்குமுனம் புவிவனை
முழுது மூடித், துன்னுமிரு ளேபரம்பி மறைப்ப வானிற் சூழ்ந்துநிறை
சுரர்கடமைத் தொலைவி லாற்றற், கொன்னுனைவே லசுரர்குழா மடர்ப்ப
வஞ்சிக் குலைகுலைந்தார் புவிநரரைக் குறுகி யாங்கே, வன்னிலைய வெம்
பூத வேதா ளங்கள் வல்விடங்கள் பல்பிணிகள் வருத்த நொந்தார். (௨)

இன்னவகை பரிபவமுற் றேங்க விண்ணோ ரிருநிலத்தா ரொழிந்
தோர்க ளெவரு மீற்றிற், றன்னியெழு மெழுகடலி னொலியே போலத்
துளங்கினர்வாய் விட்டாற்றித் தொல்லை வேத, முன்னாளிலுந் தாரகத்
தை யமல னங்கே மொழிந்திறக்கு முயிர்க்குரிய முத்தி நல்கும், பன்ன
ரிய வுருத்திரந் பூமி யாய் [illegible] காசிசேர்ப் பாங்கு சேர்ந்
தார் (௩)

